
விசேஷ
சலுகை!
1.5 கிலோ
ப்ளாஸ்டிக்
டப்பா
விலை ரூ 27-50 மட்டுமே
(உள்ளூர் வரிகள் தனி)
Point
1.5kg
RE-USABLE
JAR
பாய்ண்ட்
டிட்டர்ஜண்ட் சலவைப் பவுடர்
விலையை ஒப்பிடுக.
தரத்தை சோதித்திடுக.
உண்மையை
நீங்களே கண்டுணருங்கள்.
MCA-PDP-63-Tam

# டாக்ஸி டிரைவர் ராஜப்பா

உ. ராஜாஜி



பயணி : ''காசினோவில் ஓடற இங்கிலீஸ் படத்தில் வருகிற கார் சேஸை விட பயங்கர வேகத்தில் வண்டி ஓட்ட உன்னால் முடி யும்னு நீ சொன்னதை நான் நம்பறேன்... தயவுசெய்து வேகத்தைக் குறைச்சு ஓட்டு... புண்ணியமாய்ப் போகும்!''



டாக்ஸி டிரைவர் ராஜப்பா : ''நீங்க இந்துவா கிறிஸ்டியனா முஸ்லிமா...?''

பயணி : ''முஸ்லிம்! எதுக்குக் கேட்கிறே..?''

ராஜப்பா: ''அல்லாவைக்கடைசி முறையா தொழுதுக்குங்க.... என்ன முயன்றும் பிரேக் பிடிக்க மாட்டேங்குது!''





அவன் : ''கன்னம் ஏன் வீங்கி யிருக்கு ராஜப்பா...?''

ராஜப்பா : ''என் டாக்ஸியில் பய ணம் செய்த முரடனிடம் மீட்டருக்கு மேல் ஏதாவது கொடு ஸார்னேன்.. கொடுத்தான் ஒன்னு பளார்னு!''

ராஜப்பா: ''என்ன அநியாயம் பாருங்க. கல்யாணம் ஆகாத இளம் பெண்களை என் டாக்ஸியில் ஏற நான் அனுமதிக்கக் கூடாதாம்!''

அவர்: ''யாருப்பா சொன்னது அப்படி... போலீஸா...?''

''ஊஹும்! சந்தேகப் புத்தி படைச்ச என் மனைவிதான்!''



ராஜப்பா : ''நேற்று இரண்டு பிரபல நடி கர்கள் கோடம்பாக்கம் போகணும் வர்றியாப் பானு கூப்பிட்டாங்க... சாரி வர்றதுக்கில்லேனுட் டேன்!''

அவன் : ''ஏம்ப்பா...?''

ராஜப்பா : ''பாதி வழியில் டயர் வெடிச்சிடுச் சுன்னு? பயந்துட்டேன்... கூப்பிட்டது உசிலே மணியும் பக்கோடா காதரும் ஆச்சே...!''



ராஜப்பா : ''குடிபோதையுடன் என் டாக்ஸி யில் ஏறுகிறவர்களை எனக்கு ரொம்பப் பிடிக் கும்!''

''ஏன்...?''

ராஜப்பா : ''மீட்டர் 1:50 காட்ட போதையில் 150 ரூபாயைத் தூக்கிக் கொடுத்துட்டான் ஒரு ஆசாமி நேற்று!''



போலீஸ் அதிகாரி : ''உன் டாக்ஸி திருட்டுப் போயிடுச்சுங்கிறியே... யார் மீதாவது உனக்குச் சந்தேகம் உண்டா?''

ராஜப்பா : ''காயலான் கடை கந்தசாமி மீது பலமான சந்தேகம் ஸார் எனக்கு... அடிக்கடி என் டாக்ஸியையே வெறிக்கப் பார்த்துக்கிட் டிருப்பான்!''



# Kalki Shopping Page

# பிரெஷ்னேவ் விஜயம்

கே. ஸ்ரீநிவாசன்



பாதுகாப்பு மந்திரியாக இருந்த ஸ்ரீ கிருஷ்ண மேனன் ஐ. நா. பந்தோபஸ்து சபையில் வரலாறு காணாத வகையில் வெகு நீண்ட பிரசங்கத்தை நிகழ்த்தினார். அதன் சாராம்சம் பாகிஸ்தான் குற்றவாளி; காஷ்மீரத்தின் மேல் படையெடுத்ததுமட்டுமல்ல அதில் கணிசமான பகுதியையும் தன் வசத்தில் வைத்துக் கொண்டுள்ளது.

சாதாரணமாக இம்மாதிரி ஒப்பற்ற சொற்பொழிவு எதிர்பார்த்த பலனைக் கொடுக்கும். ஆனால் கொட்டு கொட்டு என்று விழித்துக் கொண்டு தூங்குவதாகப் பாசாங்கு செய்பவர்களை எழுப்ப முடியுமா? அம்மாதிரி நிலையில் இருந்தன மேலை நாடுகள். பிரிட்டன் தூண்டிவிட அமெரிக்காவும் அதன் சகாக்களும், பாகிஸ்தானுக்குப் பரிந்து பேசின. இந்த மாதிரி இக்கட்டான நிலைமையில்தான் ரஷ்யா தன் ''விடோ'' (Veto) என்ற விசேஷ அதிகாரத்தை உபயோகப்படுத்தி ஐ. நா. பாதுகாப்பு சபையில் தீர்மானத்தைச் செத்த பாம்பாக்கியது.

இந்தியா — ரஷ்யா உறவு வெகு பலமாக அமைந்த ஒன்று. ஆபத்துக்கு உதவிய நண்பன் ரஷ்யா. பொருளாதார நோக்கில் எதை ஏற்றுமதி செய்தால் தங்கள் பொருளாதாரம் பிழைக்கும் என்று கணக்குப்போட்டுச் செயல்பட்டவை பிரிட்டன், மற்ற நாடுகள். என்ன காரணமாகவோ பாகிஸ்தான் அவர்கள் கண்களில் இந்தியாவை விட உசத்தி.

இந்தியா — ரஷ்யா உறவுக்கு அஸ்திவாரம் போட்டவர்கள் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு, ரஷ்யப் பிரதமர் ஸ்ரீ குருஷேவ். அந்நாட்களில் இந்தியா கோஷ்டி சேராத நாடு என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதே சமயம் அமெரிக்க அந்நிய விவகார காரியதரிசியாக இருந்த ஸ்ரீ ஜான் பாஸ்டர் டல்லஸ் அமெரிக்காவுக்குப் பின் பாட்டுப் பாடாதவர்கள் அதனுடைய விரோதிகள் என்ற அறிவுக்கு எட்டாத சித்தாந்தத்தைக் கடைப்பிடித்தவர்.

அமெரிக்கப் பொருளாதாரம் வெகுவாக யுத்த தளவாடத் தொழிலே அடிப்படையாகக் கொண்டது ஆதலால் ஸ்ரீ டல்லஸ் உலகத்துக்குப் போலீஸ்காரராக நடித்தபொழுது அதன் தளவாட ஏற்றுமதிகள் சக்கைப் போடு போட்டன. பாட்டன் (Patton) டாங்குகள் ஸேபர் சண்டை விமானங்கள் எல்லாம் அந்த நாட்களில் பீதியை ஏற்படுத்திய யுத்த சாதனங்கள். பாகிஸ்தான் இவற்றை இலவச நன்கொடையாகப் பெற்றது. அது தென் கிழக்கு ஆசிய ஒப்பந்த நாடுகளில் ஒன்று. இந்தியா கோஷ்டி சேராத நாடு என்பதால் அது இலவச ஆயுதங்கள் பெறாது என்று நேரு அறைகூவினார். நாமும் பாகிஸ்தானைப் போல் அமெரிக்காவுக்குக் கைகட்டி நின்றிருந்தால் இன்று கதையே வேறு.

நம்முடைய விமானப் படை பலத்தை அதிகரிக்க ரஷ்யா 'மிக்' (MIG) விமானங்களை விற்க முன்வந்தது. அத்துடன் நிற்கவில்லை. MIG விமானங்களைத் தயாரிக்கத் தொழிற்சாலையையும் ஏற்படுத்திக் கொடுத்தது.

நேரு சர்வதேச விஷயங்களில் புலி என்பது தெரிந்த விஷயம். ஆனால் அவரை வேண்டுமென்றே சர்வதேச மதிப்பில் இறக்க வேண்டும் என்று சீனு 1962ல் இந்தியாவின் மேல் போர் தொடுத்தது. இன்று சீனுவை ஸ்ரீ மொரார்ஜி தேசாய் கூட நம்புவதற்குப் பயப்படுவதில் ஆச்சரியமில்லை.

ரஷ்யா அரசியல் நோக்கிலிருந்து மட்டும் நம் மித்திரன் என்பது இல்லை. இன்று உருக்குத் துறையில் நாமே மேலும் மேலும் புது ஆலைகளை ஏற்படுத்த தகுதியுள்ள அளவுக்கு முன்னேறியிருந்தால் அதற்கு சோவியத் யூனியன் ஒரு காரணம். பிலாய் உருக்காலை ஒரு ஆலை நன்றாகச் செயல்படுவதற்கு எடுத்துக் காட்டு.

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். மருந்துகள், மற்றும் தொழில் துறையில் அவசியமான உபகரணங்கள் எல்லாவற்றுக்கும் ரஷ்யா நமக்கு உதவி செய்திருக்கிறது.

குருஷேவ் காலத்தில் துவங்கிய அந்நியோந்நியம் இன்றும் தொடர்கிறதா என்றால் ஆம் என்று நூறு சத தீர்மானத்துடன்

சொல்வதற்கில்லை. இதற்குக் காரணம் ரஷ்யாவிலேயே அரசியல் ஆதிக்கத்துக்கு நடக்கும் போராட்டம். ஸ்டாலின் கொடுமைகளை அம்பலப்படுத்தி ஒரு பயங்கர அடக்குமுறை சூழ்நிலையை அகற்றிய குருஷேவுக்கு என்ன கதி நேர்ந்தது என்பது தெரிந்ததே. இது ரஷ்யர்களுடைய சொந்த விஷயம் என்றாலும் அதுதான் பின்னர் ரஷ்யக் கொள்கை நிர்ணயம் ஆவதற்கும் அடிகோலுகிறது.

இன்று ஸ்ரீ பிரெஷ்னெவ் ஆதிக்கம் செலுத்துகிறார். அவர் பங்களா தேஷ் ஏற்படுவதற்கு முன்நிகழ்ந்த யுத்தத்தில் கூட இந்தியாவுக்கு உற்ற நண்பராகவே இருந்திருக்கிறார். ஆனால் அவர் செய்த தவறுகள் இரண்டு. ஒன்று ஆப்கானிஸ்தான் மேல் படையெடுப்பு. மற்றொன்று தென் கிழக்கு ஆசியாவில் வியட்நாம் மூலம் அந்தப் பிராந்தியத்தில் இனி சூழ்நிலையை உண்டு பண்ணுவது.

ஸ்ரீ பிரெஷ்னெவ் இந்தியா வருகிறார். அவர் வெகு நாசூக்கான தருணத்தில் வருகை தருகிறார். ஆப்கானிஸ்தானத்தில் உள்ள ரஷ்யப் படைகள் வாபஸ் பெற வேண்டும் என்ற மற்ற நாடுகளின் கோஷம் உச்ச ஸ்வரத்தைத் தொட்டுள்ளது. இந்தச் சமயத்தில் மற்ற நாடுகள், இந்தியா ரஷ்யாவை மசிய வைக்க வேண்டும் என்று வற்புறுத்துகின்றன.

உண்மையை விளம்புவதில் தயக்கம் இருக்கக் கூடாது. பிரதமர் காந்தி — பிரஷ்னெவ் பேச்சு வார்த்தைகளில் இந்தியா இந்த அம்சத்தை வற்புறுத்த வேண்டும். நாம் ஊதும் சங்கை ஊதியாகி விட்டது என்றாலே போதும். ரஷ்யர்கள் ஆப்கானிஸ்தானத்தில் மார்க்ஸிஸ்ட் அரசு நன்றாகச் சுதாரித்துக் கொண்டு விட்டது என்று தெரிந்த பிறகு தான் தங்கள் படைகளைத் திரும்பப் பெறுவார்கள். இன்று உள்ள சூழ்நிலையில் எந்த நாடும் இந்த விஷயம் காரணமாக யுத்தத்துக்குத் தயாராக இல்லை என்பதை நாம் உணர வேண்டும்.

அடுத்தபடியாக இந்தியா கம்பூச்சியாவிலிருந்து வியட்நாம் படைகள் வாபஸாக வேண்டும் என்று வற்புறுத்த வேண்டும். இங்கும் ரஷ்யாதான் சூத்திரதாரி. நாம் அவசரப்பட்டுக் கம்பூச்சியாவுக்கு அங்கீகாரம் கொடுத்து விட்டோம். அதற்குப் பரிகாரம் தென் கிழக்கு ஆசிய நாடுகளின் பயத்தைப் போக்குவது. யுத்தம், உலக வல்லரசுகளின் மோதல் என்பதெல்லாம் வெகு தூரத்தில் உள்ளது என்ற நிலை நீங்கி இன்று யுத்தம் நம் வீட்டுக் கதவைத் தட்டுகிறது என்பது ஞாபகத்தில் இருக்க வேண்டும்.

ரஷ்யத் தலைவர் பிரெஷ்னெவுக்கு வரவேற்புத் தெரிவிக்கும் சமயம் அவரும் விட்டுக் கொடுக்கும் கொள்கையைக் கடைப்பிடிப்பார் என்று எதிர்பார்ப்போம்.

# கராத்தே பயிற்சி.16

பயிற்சியாளர் : டோனி பொன்னையா

சித்திரம் : ... படம் : உத்ரா தயாரிப்பு : குண்டுமணி





**வெட்டும் முறை**

கராத்தேயில் வெட்டும் முறை என்பது ஒரு தனி அம்சம். ஒருவரைக் கத்தி முறையில் எப்படி வெட்ட வேண்டுமென்பதைப் படத்தில் காணலாம். ஐந்து விரல்களும் இணைந்து கத்தி போலிருக்க வேண்டும்.

இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய அம்சம் ஒருவரை வெட்டு முறையில் தாக்கும்போது கை, காதின் அருகிலிருந்து வருவது அவசியம்.

# மெய்யான சோஷலிஸவாதி

## என். ஏ. பால்கிவாலா

**டிசம்பர் 10உ: ராஜாஜி பிறந்த நாள்**

குண நலன்கள், அறிவுக் கூர்மை, இரண்டும் இணைந்தவன் மாமனிதனாகிறான். சிந்தனை செயல் இரண்டிலும் அவன் புரிந்துள்ள நிலையான காரியங்கள் அவன் சிறப்பை அளவிட உதவுகின்றன. அவ்வாறு நோக்குகையில் உலக சரித்திரத்தில் ராஜாஜி ஓர் உன்னத இடத்தைப் பெறுகிறார்.

ஆட்சி அதிகாரத்தில் பல ஆண்டுகள் இருந்தும் அது தமது எளிமையையும் அடக்கத்தையும் பாதிக்க விடாத ஞானி அவர்.

தமிழ் நாட்டில் முதல்வராகவும் மத்திய அரசில் அமைச்சராகவும் அவர் மெய்யான சோஷலிஸத்தைப் போதித்தார், அமல் படுத்தினார். இன்று நாம் வேறு விதமான சோஷலிஸத்தால் இழுத்துச் செல்லப்படுகிறோம். இந்தப் புது சோஷலிஸம் கலப்படமானது. அது வாக்குறுதிகளையும் கோஷங்களையும் உண்டு வளர்கிறது. மக்களை ஏய்த்துக் கொழுக்கிறது. இந்தச் சூழ்நிலையில் ராஜாஜி நம்பிக்கை வைத்த மெய்யான சோஷலிஸத்தின் தன்மைகளை நாம் புரிந்து கொள்வோம்.

தேசம் ஆரோக்கியமான முன்னேற்றம் பெற இயற்கை வளத்தையும் மனித பலத்தையும் சிந்தனை சக்தியுடன் திட்டமிட்டு முதலீடு செய்வதுதான் மெய்யான சோஷலிஸம். நாட்டின் வளர்ச்சி என்பது ஒன்றிலிருந்து ஒன்றாகத் தானாகவே கிளைத்துப் படர்ந்து பரவிக் கொண்டேயிருக்க வேண்டும். அந்த வளர்ச்சி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும். ஒவ்வொரு நபரிடமும் உள்ள ஆண்டவன் தந்த ஆற்றல்கள் அனைவரும் அனுபவிக்கப் பயனாக வேண்டும்.

இத்தகைய மெய்யான சோஷலிஸ சிந்தனையைச் செயலாக்குவதற்குப் புத்திகூர்மை, ஞானம், நல்லொழுக்கம், அர்ப்பணிக்கும் மனோபாவம் ஆகியன தேவை. இந்த அபூர்வ குணங்கள் அனைத்தையும் ஒருங்கே பெற்றிருந்த ராஜாஜி உண்மையான சோஷலிஸ அரசை மக்களுக்குத் தந்தார். ஏழைகளுக்காக நீலிக் கண்ணீர் வடிக்காமலும், ஏழைகளிடம் அனுதாபம் கொண்டிருப்பதே தமது பிரமாதமான சிறப்பியல்பு என்று பெருமிதத்தோடு காட்டிக் கொள்ளாமலும், ஏழைகளுக்காக ஆழ்ந்த பரிவுணர்ச்சி கொண்டிருந்தார். மக்களை நடத்திச் செல்கின்ற தலைவர்களாய் இல்லாமல் மக்களால் நடத்திச்செல்லப்படுகிற தலைவர்களாய்எல்லோரும் இருந்த காலத்தில், தொட்டால் மறைந்து போகும் மாயத் தங்கம் போன்ற பொய்யான பளபளப்புடன் கூடிய அரசியல் பிராபல்யத்தையே அனைவரும் தேடி அலைந்த கால கட்டத்தில் ராஜாஜி காற்றினால் அலைக்கழிக்கப்படும் பாலை மணலிடையே ஒரு பாறை போன்று நின்றார்.



ராஜாஜியின் அறிவுக் கூர்மை மிக நுட்பமானது. மிக விரைவாகச் செயல்படுவது; எந்தப் பிரச்னையையும் கீறிப் பார்த்துவிடும் ஆற்றல் அதற்கு இருந்தது. அவரது ஞானம் எந்தப் பிரச்னைக்கும் விடை கண்டு கூறியது. விரிந்து பரந்த அவர் அறிவுக்கு ஈடாக எதைக் கூறுவது என்றால் அவர் ஆழ்ந்து படித்த நூல்களின் வீச்சினைத்தான் குறிப்பிடலாம். அவரது தீர்க்க தரிசனம் காரணமாக அவர் சொன்னவை பல சமயங்களில் நமக்குப் புதிராக இருந்ததுண்டு. காந்திஜி ஒரு முறை குறிப்பிட்டார்: ''ராஜாஜி என்னைக் காட்டிலும் குறைந்த பட்சம் ஆறு மாதங்கள் முன்னோக்கிப் பார்க்கிறார்.'' கென்னடி ராஜாஜியின் சந்திப்பு தன்னிடம் ஏற்படுத்திய அளாவலை இப்படி வர்ணித்தார்: ''நான் ஜனாதிபதியான பிறகு என்னைப் பண்படுத்திய சக்திகளில் மிகச் சிறந்த ஒன்று.''

பல்வேறு தரப்பட்ட மக்களிடம் அவரவருக்கு ஏற்பப் பேசும் ஆற்றல் ராஜாஜிக்கு இறைவன் தந்த வெகுமதியாக அமைந்திருந்தது. அறிவாளிகளுடன் அளவளாவும் போது ஆழ்ந்த சிந்தனைகளைப் பொருத்தமான வார்த்தைகளால் வெளியிட்டுத் தம் கருத்துக்களை அவர்கள் ஏற்குமாறு செய்வார். பொதுமக்களிடம் எளிய சொற்களில் பேசி அவர்களுடைய இதயத்தையும் சிந்தனையையும் கவர்ந்து விடுவார்.

எந்தப் பெரிய பிரச்னையும் அவருடைய திறமைக்கு அப்பாற்பட்டதாக நின்றதில்லை. எந்தச் சின்னப் பிரச்னையையும் அவர் தமது தகுதிக்குக் குறைந்ததாக நினைத்ததில்லை. தாம் செய்யும் எந்தக் காரியமானாலும் அதனைக் கச்சிதமாகச் செய்து முடிப்பார். ராஜாஜி என்றாலே சத்தியத்தின்பால் நிற்கும் அறிவு, சோர்வறியா வீரம், கலப்படமற்ற




எளிமை ஆகியவற்றைக் குறிப்பதாகிவிட்டது. காற்று எந்தப் பக்கம் வீசினாலும் அலைகள் எந்தப் பக்கம் இழுத்தாலும் கலங்காமல், தமது வாழ்க்கைப் படகை ஒரே நட்சத்திரத்தை வழிகாட்டியாகக் கொண்டு செலுத்தியவர் ராஜாஜி. அந்தத் தாரகை தான் அறிவார்ந்த நம்பிக்கையுடன் கூடிய மனச்சாட்சி.

ஒரு வாழ்நாளின் சாதனைகள் என்று இவ்வளவு நீண்ட பட்டியலை உருவாக்கியவர்கள் உலக அரங்கில் மிக அபூர்வமே. அவர் எழுதி வெளியான சம்ஸ்கிருத இலக்கியங்களின் ஆங்கில மொழிபெயர்ப்புகளும் ஐரோப்பிய இலக்கியங்களின் தமிழாக்கங்களும் இலக்கிய உலகில் சிறப்பிடம் பெற்று விட்டவை.

இன்னும் பல தலைமுறைகளுக்குப் பிறகு, இன்றைய அரசியல் உலகினை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் பலர் மறக்கப்பட்ட பின்னரும் இந்த மாபெரும் அறிவுச் சுடரை மக்கள் நினைவில் வைத்துக் கொண்டிருப்பார்கள், மதித்துப் போற்றுவார்கள். அவர் இந்திய சுதந்திர சரித்திரத்துக்கு ஒரு புதிய அத்தியாயம் எழுதினார். இந்தியர்கள் இந்தியரிடமே அடிமைப்பட்டிராமல் சுதந்திரம் பெறுவது பற்றிய அத்தியாயம் அது. அந்த அத்தியாயத்தின் முழு தாத்பரியமும் வருங்காலத்தில்தான் உணரப்படும்.

தமது முதுமைப் பருவத்தில் அமைதியாகக் காலத்தை ஓட்டுகின்ற திருப்தி ராஜாஜிக்குக் கிட்டவில்லை. 93வது வயதிலும் அவருக்குள் ஒரு பரபரப்பு; முடிவு பெற முடியாததான ஒரு பணியைத் தொடர்கின்ற ஒரு வேகம்! அவரது பெரிய சாதனைகளிலெல்லாம் மிகப் பெரியதாகச் சரித்திரம் எதைக் குறிப்பிடுமெனில் அவர் எண்பது வயதுக்கு மேல் சாதித்தவற்றைத்தான். அறியாமை என்னும் முக்காடிட்டுக் கொண்டு தெளிந்த பார்வையின்றி விளங்கிய தலைவர்களால் சூழப்பட்டிருந்த போதிலும் ராஜாஜி அந்த வயதான காலத்தில் தாம் முன்பு பல முறை செய்த காரியத்தை மீண்டும் செய்யத் துணிந்தார்: ஒரு புதிய பாதை சமைத்தார். உன்னதமான சுதந்திர லட்சியங்கள் நமது அரசியல் சாசனத்தில் கோயில் கொண்டிருந்த போதிலும் சக்தி வாய்ந்த அதிகார வர்க்கம் மக்களின் அடிப்படை உரிமைகளை நசுக்கிக் கொண்டிருப்பதையும் பெர்மிட் லைசென்ஸ் கோட்டா ஆட்சி தேசப் பொருளாதாரத்தைச் சிறைப்படுத்தி விருப்பதையும் லஞ்ச ஊழல் நாடெங்கும் ராணுவ நடை போடுவதையும் கண்ட இந்த எண்பது வயதான மெலிந்த மனிதர் மறுபடியும் தேச விவகாரங்களின் நடு மையத்துக்கு வந்தார். மெய்யான சுதந்திரத்துக்காகப்பாடுபட்டார்.

பண்பாடும், தர்மமும் நிரம்பிய, மதிப்புகளும் நாகரிக நடத்தையும் மிகுந்த பழைய உலகம் அழிந்துவிடும் போலத்தான் தெரிந்தது. ஆனால் அதன் சார்பில் போராட ஒருவர் இல்லாது போகவில்லை. அவர் ஒரு புதிய கட்சி துவக்கினார். பல்வேறு மாநிலங்களுக்குச் சென்று பேசினார். சுயராஜ்யாவிலும் கல்கியிலும் எழுதி எழுதிக் குவித்தார். இவை அச்சத்தையும் விரக்தியையும் கரைத்து விட்டன. ஜனநாயகம், சுதந்திரம் பற்றிய வரலாற்றில் ராஜாஜி தமது இறுதிப் பதின்மூன்று ஆண்டுகளில் சாதித்த காரியங்களுக்கு ஈடு இணையாக எதையுமே கூற முடியாது.

ராஜாஜியின் வயதில், அவருக்கிருந்தது போன்ற எதிர்ப்புகளைச் சமாளித்து, இவ்வளவு முயன்று, இவ்வளவு துணிந்து, இவ்வளவு பாடுபட்டு, மக்களுக்காக இவ்வளவு சாதித்தவர் உலக சரித்திரத்தில் வேறு யாருமே கிடையாது. ஒரு மாவீரனாக விளங்கி சுதந்திரத்தின் ஆன்மாவை இந்தியர்கள் கண்டுகொள்ளுமாறு செய்தார். சுதந்திரங்களைக் காக்கத் தமது திறமைகள் அனைத்தையும் பயன்படுத்தினார்.

அவர் நமக்குச் சுயமரியாதையைத் திரும்பவும் அளித்தார். வயிறு நிரம்புவது மட்டுமே வாழ்க்கை அல்ல என்று கற்றுத் தந்தார். நாம் நினைத்துக் கொண்டிருப்பதை விட நாம் பெரியவர்கள் என்று நமக்கு உணர்த்தினார்.

அவரது செய்தி எளிமையானது: சுதந்திரம் என்பது பிதுரார்ஜித சொத்து அல்ல. அதனைப் போற்றிப் பாதுகாத்து அதற்காகப் போராடவில்லையெனில் பறி போய்விடும்.

# ஷான்



‘குர்பானி’ வெற்றிக்குப் பிறகு இந்தி(ய)த் திரைப்பட உலகம் மிகவும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் திரைப்படம் ஷான்.

இப்படத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டரான சுனில் தத்தை ஆயிரம் நாய்கள் துரத்தி வர மேலேயிருந்து ஒரு ஹெலிகாப்டரும் துரத்தி வருகிறது. ஆயிரம் நாய்களை குவாலியர் போலீஸ் நாய் பயிற்சிக் கல்லூரியிலிருந்து பம்பாய் வரை கொண்டு வந்தார்கள். மெரைன் டிரைவ் போன்ற போக்கு வரத்துமிருந்த இடங்களில் நாய்கள் துரத்தும் காட்சியைப் படமாக்குவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டதாம்.

இந்தப் படத்துக்காக பம்பாய் பிலிம் நகரத்தில் ஏராளமான கண்ணாடிகளுடன் 12 லட்சம் ரூபாய் செலவில் ஒரு பிரம்மாண்டமான செட் போடப்பட்டது. அப்பொழுது பர்வீன் பாபிக்கு உடல்நிலை சரியில்லாததால் அந்த ‘செட்’டை அழித்து மீண்டும் புதிதாகப் போடுவதற்குப் பதிலாக அதனை அப்படியே வைத்திருந்து அதற்கு ஆறு மாதம் வாடகை கொடுத்தார்களாம். அமிதாப்புக்கு மஞ்சள் காமாலை வந்ததால் படப்பிடிப்பு மேலும் ஒரு வருடம் தாமதம் ஆயிற்றாம்!

இப்படத்தின் ரீ-ரிகார்டிங்குகளும் மிக்சிங்கும் லண்டனில் 20 நாட்கள் இருந்து செய்து வந்தார்களாம்.

ஷோலே, சீத்தா ஔர் கீதா, அந்தாஸ் முதலிய வெற்றிப் படங்களை எடுத்த ஜி.பி. சிப்பி இப்படத்தை எடுத்திருக்கிறார். மற்ற மூன்று படங்களின் செலவுகளைக் கூட்டினால் கிடைக்கும் விடையை விட இந்தப் படத்துக்கு ஆன செலவு அதிகம் என்கிறார் அவர்.



இப்படத்தில் 12 கார் சேஸ்கள் வருகின்றன. இதற்காக அமெரிக்காவிலிருந்து ‘போர்ஷே’ என்ற பெயருள்ள மணிக்கு 180 மைல் வேகத்தில் ஓடக்கூடிய காரை வாங்கிப் படப் பிடிப்பு முடிந்ததும் மத்திய அரசாங்கத்துக்கே அந்தக் காரைக் கொடுத்து விட்டார்கள். ஏனென்றால் கார் இறக்குமதியை அரசின் விதிகள் அனுமதிக்கவில்லை. படத்தின் முக்கிய நட்சத்திரங்கள் அனைவரும் ஏதாவது ஒரு கார் சேஸில் இடம் பெற்றிருப்பார்களாம்.

இப்படத் தயாரிப்புக்குச் செலவான கச்சா பிலிம் ரோல்களை வைத்துக் கொண்டு இரண்டு மல்டி ஸ்டார் படங்களை எடுக்கலாம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

— ராம்குமார்


மத்திய அரசுக்கு எதிர்ப்பு!
விலைவாசியைக் குறை!..
அவசர சட்டங்களை ஒழி!
இப்படித் தாறுமாறு குதிச்சா இது வேண்டியது தான்!
ஆட்சி பீடம்


பாக்
ஆயுதக் குவிப்பு
இந்தியாவுடன் சமாதானமே எங்கள் நோக்கம்!


முக்கியமான பிரச்னைகள் அவசரமா பேச வேண்டியிருக்கு.. எல்லாரையும் கூப்பிடுங்க.. இப்படி சோபாவிலே உட்கார்ந்து பேசுவோம்!
சட்ட மன்றம்
எதுக்கு?.. இங்கே வாங்க இங்கேயே பேசிக்குவோம்!

# உபதேர்தல்கள்

ஏழு மாநிலங்களில் நடந்த பதினைந்து சட்டமன்ற உபதேர்தல்களில் இந்திரா காங்கிரஸ் பத்து இடங்களை வென்றுள்ளது. அதாவது இந்த உபதேர்தல்களிலும் மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மை! ராஜஸ்தான், ஒரிஸ்ஸா, மகாராஷ்டிரம் ஆகிய மாநில முதலமைச்சர்கள் தேர்தலில் நின்று வெற்றி பெற்றுள்ளார்கள். வாழ்த்துகிறோம்.

நாடாளுமன்றத்தில் மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மை இருந்தும் அதனை ஒதுக்கி, புறக்கணித்து அவசரச் சட்டங்கள் மூலமே ஆண்டு வருவது தவிர பத்துமாத காலத்தில் வேறு எந்தச் சாதனையையும் இந்திரா காங்கிரஸ் அரசு செய்ததாகத் தெரியவில்லை. நாடாளுமன்றத்தின் பட்ஜெட் கூட்டத் தொடருக்குப் பிறகு ஐந்து மாத காலத்துக்குள் பத்து அவசரச் சட்டங்களைப் பிறப்பித்தது ஒரு உலகமகா சாதனையாகக் கூட இருக்கலாம். அதற்கு முன்பே பிறப்பிக்கப்பட்ட பல அவசரச் சட்டங்களும் உண்டு.

இத்தனை அவசரச் சட்டங்களுக்குப் பிறகும் விலைவாசிகள் உயர்கின்றன, சட்ட ஒழுங்குப் பிரச்னைகள் அதிகரிக்கின்றன, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற மக்களின் வேதனைகள் வளர்கின்றன.

இருப்பினும் மக்கள் இந்திரா காங்கிரஸுக்கே வோட்டுப் போட்டார்கள் என்றால் காரணங்கள் இரண்டு. ஒன்று, எதிர்க் கட்சியினர் உதிரி நெல்லிக்காய்களாய் இருக்கிறார்கள்; இவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினாலும் உருப்படியாக எதையும் அவர்களால் செய்ய முடியாது என்ற எண்ணம். மற்றது, இந்திரா காந்தியிடம் மக்களுக்கு உள்ள அசைக்க முடியாத நம்பிக்கை. ஏதேனும் செய்து எப்படியேனும் நமக்கு நல்வாழ்வு அளிப்பார் என்ற எதிர்பார்ப்பு.

மக்களின் அந்த ஆசை நிராசையாகி விடாதிருக்க இந்திரா காங்கிரஸ் ஆட்சி ஸ்திரமான ஆட்சியாக இருந்தால் மட்டும் போதாது; செயல் திறனுள்ள ஆட்சியாக மாற வேண்டும்.

# லடாய்!

டிவி நிலையத்துக்கும் தமிழக அரசுக்கும் இடையே 'லடாய்!'

நமது நிருபர் டிவி நிலைய இயக்குனரை இது சம்பந்தமாய்ப் பேட்டி காணச் சென்ற போது, ''எங்கள் மீது என்ன குற்றச்சாட்டு என்று முதல்வரைப் போய்க் கேளுங்கள்; சென்னை தொலைக்காட்சி நிறுவன இயக்குனர் பதில் கூற மறுத்து விட்டார் என்று போடுங்கள்'' என்றெல்லாம் கூறியுள்ளார்.

இத்தகைய போக்கு பிரச்னைகளைத் தீர்ப்பதற்குப் பதில் சிக்கலை அதிகரிக்கவே செய்யும். தேசிய ஒருமைப்பாடு வார விழாவில் டிவி காமிராக்கள் இயங்க வேண்டாம் என்று தடுத்த முதல்வர், 'எந்தத் தனி நபர் மீதும் தமக்குக் கோபமில்லை; உண்மைகள் திரித்துக் கூறப்படுவதைத் தாம் விரும்பவில்லை; தேசிய ஒருமைப்பாடு கருதியே இப்படித் தடை விதிக்க வேண்டியிருக்கிறது' என்றெல்லாம் பேசியுள்ளார். முதல்வர் எதைக் குறிப்பிட்டுக் கூறுகிறார் என்பதை இயக்குனரால் புரிந்து கொள்ள முடியவில்லை அல்லது புரிந்து கொள்ள முயலக்கூட இல்லை எனில் அவர் தமது பொறுப்புணர்ந்து நடந்து கொள்வதாக எண்ணுவதற்கில்லை.

டிவி, ரேடியோ ஆகியன மத்திய அரசின் ஆளுகைக்கு உட்பட்டவையே என்றாலும் மாநில முதல்வரின் கருத்துக்களை நிலைய இயக்குனர் அலட்சியப்படுத்தி விட முடியாது; மதிப்புத் தர வேண்டும்.

டிவி அல்லது ரேடியோ மத்தியில் ஆட்சியில் இருக்கும் கட்சியின் ஏக போகமல்ல; மக்கள் அனைவருக்கும் பொதுவான அரசாங்கச் சொத்து.

மத்தியில் ஒரு கட்சியின் ஆட்சியும் மாநிலத்தில் வேறொரு கட்சியின் ஆட்சியும் இருக்கும்போது ரேடியோ, டிவி நிலையத்தினர் பாரபட்சமின்றி நடந்து கொள்வதாகச் சொன்னால் போதாது; பாரபட்சமின்றி நடந்து கொள்வதாக அனைவரும் நம்பும்படி செயல்பட வேண்டும்.

1980 டிசம்பர் 7

ரௌத்திரி கார்த்திகை 22

மலர் 39 : இதழ் : 19



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



# வெந்து தணிந்த காடுகள்

இந்திரா பார்த்தசாரதி

௫

“நீ சொன்ன விஷயங்களை விட நீ அழறேங்கறதுதான் எனக்கு அதிர்ச்சியாயிருக்கு'' என்றான் அருண்.

ராதிகா கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தாள். கண்களிலிருந்து பெருகிய நீரை அவள் கட்டுப்படுத்திக்கொள்ள முயலவில்லை. அவளெதிரே கூடை நாற்காலியில் உட்கார்ந்திருந்தான் அருண்.

அவள் இவ்வாறு கூறுவதில் ஆச்சரியமில்லை. நேற்றுத்தான் அவள் அநுபவித்து வரும் சுதந்திரத்தைப் பற்றியும் சந்தோஷத்தைப் பற்றியும் அவனிடம் சொல்லிக் கொண்டிருந்தான். இன்று அவள் அழப் போகிறாள் என்று அவன் எதிர்பார்த்திருக்கவே மாட்டான்.

அவள் அழுவதற்கு என்ன காரணம்? ராகுல் அவளிடமே நேரடியாக இதைப் பற்றிப் பேசினான் என்பதினாலா, இல்லாவிட்டால் ரமேஷ் அவளைப் பற்றி ஓர் அபாண்டத்தைக் கூறினான் என்பதினாலா?... ராகுல் சொன்னது போல் அவன் ஒரு 'கவர்ட்'தான் சந்தேகமில்லை. ராகுல் பிறந்ததிலிருந்து இந்தச் சந்தேகம் அவன் மனத்தை அரித்துக்கொண்டே இருந்திருக்கிறது. தன் மீதே நம்பிக்கை இல்லாதவனை என்னவென்று சொல்வது? அவனை அப்பொழுதே கேட்டிருந்தாளானால், இத்தனை வருஷங்கள் அவனுடன் வாழ்க்கை நடத்த வேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காது...

இத்தனை வருஷங்கள் அவளுக்குத் தெரியாமலேயே, ஒரு பொய்யை நிஜமென்று நம்பி அவள் வாழ்ந்து வந்திருக்கிறாள். 'அவள் வாழ்க்கையில் ரமேஷ் குறுக்கிடுவது இல்லை. அவளும் அவன் வாழ்க்கையில் குறுக்கிடுவது இல்லை. இதுதான் எங்கள் சந்தோஷத்துக்குக் காரணம்' என்று எத்தனை பேரிடம் சொல்லியிருக்கிறாள். அவளைப் பொறுத்தவரையில் அவள் சந்தோஷமாகத்தான் வாழ்ந்திருக்கிறாள்.... ஆனால் ரமேஷும் சந்தோஷமாகத்தான் இருந்திருக்க வேண்டுமென்று அவள் நினைத்தது தவறு என்று உணர்கிறபோதுதான் எவ்வளவு பெரிய பொய்யான நம்பிக்கையுடன் அவள் வாழ்ந்திருக்கிறாள் என்று புரிகிறது. அப்படியானால் அவள் இதுவரை அநுபவித்து வந்த சந்தோஷமும் பொய்தான்... ஒரு மானஸீகத்தைக் கற்பித்துக் கொண்டு வாழ்ந்த வாழ்க்கை அர்த்தமற்றதுதான். சந்தேகமில்லை.

இனிமேல் ரமேஷ் கூட இருப்பது என்பது இயலாத காரியம். அவன் அவளை விட்டுப் போய்விட்டான் என்றால் அதுதான் அவன் அவளுக்குச் செய்யக் கூடிய பெரிய உதவி. ஆனால், 'ஆக்ஸிடெண்ட்' என்றால்... தொந்தரவுதான்.... இது 'ஆக்ஸிடெண்டாக' இருக்க முடியாது. பெரிய பெட்டியாக எடுத்துக்கொண்டு போனதாக அர்ஜுன் சொல்கிறான். அவன் அப்படித் திரும்பி வந்தாலும் அவள் அவனுடன் வாழ்க்கை நடத்துவதாக இல்லை.

''போலீசுக்குப் போன் செய்து ஏதாவது 'ஆக்ஸிடெண்டைப்' பத்தித் தகவல் வந்ததான்னு கேக்கலாம், ஒண்ணு... அடுத்தபடியா பத்து மணிக்கு மேலே, ரமேஷ் ஆபீசுக்குப் போன் பண்ணி....''

''நோ... ஐ ஆம் ஷ்யூர். இது 'ஆக்ஸிடென்ட்' இல்லே... என்னைப் பொறுத்தவரையிலும் தீர்மானம் பண்ணியாச்சு.... ரமேஷோட என்னாலே இனிமே இருக்க முடியாது.''

''டோன்ட் பி ஸில்லி... ராகுல் கிட்டே அவர் அப்படிச் சொல்லியிருப்பார்னு என்ன நிச்சயம்? நான் சொல்றேன்னு நீ வித்தியாசமா நினைக்கக்கூடாது, ராகுல் ஒரு 'நார்மல் சைல்டா' எனக்குப் படலே. அப்படியே அவர் சொல்லியிருந்தாலும் இதைப் பத்தி அவர்கிட்டே நீ 'ஃப்ராங்கா' பேசித்தான் முடிவு எடுக்கணுமே தவிர, 'இம்பல்ஸிவ்வா' தீர்மானம் பண்றது தப்பு...''

''ராகுல் பொய் சொல்ல மாட்டான். அவன் 'நார்மல் சைல்ட்' இல்லேங்கிறதை நானும் ஒப்புத்துக்கிறேன். 'நார்மல் சைல்டா'க இருந்தா, அப்பா பேரிலே அநுதாபந்தான் வந்திருக்கும்... பிள்ளை கிட்டேயே ஒரு அப்பன் இப்படிச் சொல்றானே, சந்தேகப்படற விஷயத்தை நேரே சந்திக்க முடியாத கோழைன்னு, அப்பா பேரிலே அவனுக்கு ஒரு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறதே,

அவன் 'நார்மல் சைல்ட்' இல்லேங்கறதைத் தான் காட்டறது.... பட்....''

அருண் அவளை இடைமறித்தான். ''லிஸன் டு மீ... ரமேஷை நான் புரிஞ்சுண்ட வரையிலும் அவர் எப்பொழுமே இதைப் பத்தி... அதாவது அவர் மனத்திலே உண்டான சந்தேகத்தைப் பத்திப் பேசியிருக்க மாட்டார்னு தான் தோணறது.... யுவர் வே ஆஃப் லைஃப் அன்ட்....''

அவன் மேலே சொல்லத் தயங்கினான். அதைச் சமாளிக்க ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

• ராதிகா கையை நீட்டினாள். ஒரு கண நேரத்துக்குப் பிறகு. அவன் பாக்கெட்டை அவளிடம் கொடுத்தான்.

அவளும் ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டாள்.

''வாட் ஈஸ் மை வே ஆஃப் லைஃப்?'' என்று கேட்டாள் ராதிகா.

''இதான்'' என்று அவள் சிகரெட் குடிப்பதைச் சுட்டிக் காட்டிக் கொண்டே புன்னகை செய்தான் அருண்.

''யு ஆர் எ கன்ஸர்வேடிவ், பேஸிக்கலி.''

''எஸ்... ஐ ஆம்... விம்மி உன் மாதிரி இருந்திருந்தா எனக்கு நிச்சயம் பிடிச்சிருக்காது....''

''என்ன பண்ணியிருப்பீங்க?''

''முதல்லே கல்யாணமே பண்ணிண்டிருக்க மாட்டேன்.''

''கல்யாணம் ஆனப்புறம் தெரிஞ்சிருந்தா?''

''லுக்... 'ஹைபாதிடிகல்' கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் சொல்லத் தயாரா இல்லே...''

''நீங்க இப்படி இருக்கிறது விம்மிக்குப் பிடிக்கலேன்னு?''

''விம்மி லைக்ஸ் மீ... இதைப் பத்தி எனக்குச் சந்தேகமில்லே...'' என்று சொன்னான் அருண் ஓர் உறுதியான குரலில்.

''விம்மிக்கே சந்தேகமாயிருந்தா?''

அருண் எழுந்திருந்தான். அவன் சிறிது எரிச்சலுடன் சொன்னான்: ''லுக்... உன் பிரச்னையைப் பத்திப் பேசத்தான் நான் இங்கே வந்தேன். எனக்கொரு பிரச்னையுமில்லே... ஐ நோ விம்மி... அவ தன்னைப் பூரணமா என்னோட ஐக்கியப்படுத்திண்டுட்டா. இது அவளுக்கும் பிடிச்சிருக்கு. எனக்கும் பிடிச்சிருக்கு... நாங்க சந்தோஷமாக இருக்கறதுக்கும் இதுதான் காரணம். நான் இதுக்கு மேலே இதைப்பத்திப் பேசத் தயாரா இல்லே... உனக்கு உன் பிரச்னையைப் பொறுத்த வரையில் என் உதவி தேவையாயிருந்தாச் சொல்லு... இல்லேன்னு, டோன்ட் வேஸ்ட் மை டைம், ப்ளீஸ்...''

''ஐ, ஆம் ஸாரி...கா்லம்பறக் கூப்பிட்டு உங்க டயத்தை வேஸ்ட் பண்ணினது தப்புத்தான்... பட்... ராகுல் சொன்ன விஷயம்... இந்த டெவலப் மென்டை' நான் எதிர்பார்க்கலே... நௌ ஐ ஹாவ் டிஸைடட் ரமேஷோட நான் இருக்கப் போறதில்லே.''

''இஃப் யு ஆர் அப்ஸெட், நீ ஆஃபீசுக்கு இன்னிக்கு வரவேணாம்...'' என்று சொல்லிக் கொண்டே அறையை விட்டு வெளியே போக ஆயத்தமானான் அருண்.

''நோ... நான் ஆஃபீசுக்கு வரேன்... 'அப்ஸெட்'னு சொல்லிண்டு வீட்டிலே உட்கார்ந்திருந்தேன்னு, தோல்வியை ஒப்புத்துண்ட மாதிரி....''

''எது வெற்றி, எது தோல்வின்னு எனக்குப் புரியலே... ஓ.கே... பை...பை.''



அருண் வீட்டை அடைந்தபோது விம்மி ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

அவன் தினசரித் தாளை எடுத்துக் கொண்டு சோபாவில் உட்கார்ந்தான்.

''ராதிகாவைப் பத்தி நீ என்ன நினைக்கிறே, விம்மி?''

விம்மி அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள். பதில் கூறவில்லை.

''எதுக்குச் சிரிக்கறே?''

''இதான் முதல் தடவை, நீங்க என் அபிப்பிராயத்தைக் கேக்கறது'' என்றாள், விம்மி.

அருண் அவளை ஆச்சரியத்துடன் நோக்கினான்.

''எதுக்கு அப்படிப் பார்க்கிறீங்க?''

''நீ சொல்றது எனக்குப் புரியலே... இது வரையிலும் உன்னோட அபிப்பிராயத்தை நான் கேட்டதே இல்லையா?''

''இல்லே... அது கிடக்கட்டும், ராதிகாவைப் பத்தி எதுக்காக என்னிடம் அபிப்பிராயத்தைக் கேக்கறீங்க?''

''ரமேஷ் அவளை விட்டுப் போயிட்டான்னு அவ நினைக்கிறா... ஆனா அதைப் பற்றி அவ கவலைப்படலே... ரமேஷ், ராகுல் கிட்டே ஏதோ சொல்லியிருக்கான்... அதான் அவளை ரொம்பக் கஷ்டப்படுத்தியிருக்கு...''

''என்ன சொன்னாராம்?''

அருண் சிறிது நேரம் பேசாமலிருந்தான். பிறகு சொன்னான்: ''நீ உன்னை என்னோட பரிபூரணமா ஐக்கியப்படுத்திண்டுட்டேன்னு நான் ராதிகா கிட்டே சொன்னேன்... நான் சொன்னது தப்பா?''

''ரமேஷ் ராகுல் கிட்ட என்ன சொன்னாராம்?''

''என் கேள்விக்கு நீ பதில் சொல்லலே.''

''நான் என்ன பதில் சொல்லணும்னு நீங்க எதிர்பார்க்கிறீங்க?''

''ஏன்?''

''நீங்க எதிர்பாக்கிறதைச் சொல்லிட்டா, உங்களுக்குத் திருப்தியா இருக்குமில்லையா?''

அருண் அவளைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தான். பிறகு தினசரித் தாளைப் படிக்கத் தொடங்கினான்.

''ஏன், ஒண்ணும் பேசாம, பேப்பர் படிக்க ஆரம்பிச்சுட்டீங்களே?''

அருண் தினசரித் தாளை விட்டெறிந்து விட்டு அவளருகே வந்து நின்றான்.

''நீ சொல்றது, செய்யறது எல்லாம் என் திருப்திக்குத்தானா?... உனக்கு இதிலே எந்தவிதமான 'கன்விக்ஷனும்' கிடையாதா?''

விம்மி பதில் கூறவில்லை.

''விம்மி... சொல்லேன்...'' அவன் ஏன் இப்படி இறைஞ்சும் குரலில் கேட்கிறானென்று அவளுக்குப் புரியவில்லை.

''இப்போ அதுக்கு என்ன?... ரமேஷ் ராகுல் கிட்ட என்ன சொன்னாராம்?''

''ஹெல் வித் ராதிகா அண்ட் ரமேஷ்... நான் கேட்கிற கேள்விக்கு நீ பதில் சொல்.''

திடீரென்று அவனுக்கு ஏற்பட்ட கோபம் அவளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அது அவளுக்கு ஒரு புதிய அனுபவம்.



''ஏன் ராதிகா வீட்டிலே என்ன நடந்தது? இவ்வளவு கோபத்தோட நீங்க பேசி நான் பார்த்ததே இல்லே...''

அருணுக்குத் தான் அப்படிக் கத்தியிருக்கக் கூடாது என்று தோன்றியிருக்க வேண்டும்.

''ஐ ஆம் ஸாரி, விம்மி'' என்று சொல்லியவாறு அவன் மறுபடியும் சோபாவில் உட்கார்ந்து கொண்டான்.

இவனுக்குத் திடீரென்று இவ்வளவு கோபம் வந்ததற்கு என்ன காரணம்? அவன் அவள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தயங்கியது அவளுக்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்திருக்கிறது. 'உங்களுக்கு நிஜமாகவே ஆற்றல் இருந்து அது இன்னும் எக்ஸ்பிரஸ் ஆகலேன்னா அதுக்குக் காரணம், உங்களுடைய இப்பொழுதைய வாழ்க்கை போதுமான அளவுக்கு இன்னும் உங்களுக்கு 'போர்' அடிக்க லேன்னுதான் அர்த்தம்!'... தாமோதரனின் குரல் அவளுக்குள் சன்னமாக ஒலித்தது.

போர் அடிக்கவில்லையா?... தன்னைப் பற்றி யன்றி வேறு நினைவே யில்லாத ஒரு 'மெக்லோமானியாக்'குடன் இத்தனை



கல்கத்தா Communications Consultantsல் பணி புரியும் ஸ்ரீ K. M. சங்கரனின் குமாரன் சிரஞ்சீவி **மகாதேவனுக்கும்** (Officer, Indian Overseas Bank, K. K. Nagar Madras) ஸ்ரீ K. மஹாலிங்கம் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி **ராதாவுக்கும்** 13-11-80 அன்று சென்னை மயிலாப்பூர் சுபா கல்யாண மண்டபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

**வாழ்க மணமக்கள்**



உபன்யாச சக்ரவர்த்தி டில்லி அனந்தராம தீக்ஷிதர் என்று அழைக்கப்படும் ஸ்ரீ M. R. நாக சுப்பிரமணியன் (Retd. Meteorologist, New Delhi) அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி **லலிதா** B. A. **க்கும்** மதுரை வழக்கறிஞர் ஸ்ரீ V. சங்கரன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி **உமா மகேஸ்வரன்** B. E. (Hons) M. E. **க்கும்** சமீபத்தில் சென்னையில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

 

அருள் வாக்கு

## பராசக்தி புத்திரன் பெருமை

● சுப்பிரமண்ய புஜங்கத்தில், நமது மனசு உருகும்படி ஆதி சங்கர ஆசார்யாள் திருச்செந்தூரில் கடலோரத்தில் விளங்கும் ஷண்முக நாதரைப் பார்த்துப் பாடுகிறார்:

''பராசக்தி புத்திரனே!. 'சமுத்திரக் கரையில் நிற்கிற நான் சம்சார சமுத்திரத்தின் அக்கரைக்குப் பக்தர்களைக் கடத்துவிக்கிறேன். அலைகளெல்லாம் சமுத்திரத்தில் மடங்கி விழுந்து ஒடுங்கி விடுவதைப் போல் என் சந்நிதிக்கு வருகிறவர்களின் ஆபத்துக்கள் கஷ்டங்கள் எல்லாம் ஒடுங்கியே போகும்' என்பதைக் காட்டுகிறாய்.''

''குகனைத் தவிர இன்னொரு தெய்வம் எனக்குத் தெரியவில்லை. தெரியவே இல்லை'' (ந ஜானே, ந ஜானே) என்கிறார் ஆசார்யாள்—

'கடலிலே அலைகள் எழும்பி அதிலேயே லயிக்கிற மாதிரி, சகல ஜீவ ஜகத்தும் பரம சத்தியமான என்னிடம்தான் தோன்றி என்னிடமே முடிகின்றன' என்ற ஞானோபதேசத்தைத் திருச்செந்தூர் முருகன் சொல்லாமல் சொல்கிறார். நாரதருக்கு ஞானோபதேசம் செய்த ஸனத்குமாரரிடம் ஈசுவரனே தழைந்து வரம் கேட்டு, ஞான ஸ்கந்தனாக அவரைப் பெற்று, மறுபடியும் அவரிடம் தழைந்து ஞானோபதேசம் (பிரணவ உபதேசம்) வாங்கிக் கொண்டார்.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

---

வருஷங்கள் அவள் வாழ்க்கை நடத்திக் கொண்டிருப்பது அவனுக்கு 'போர்' அடிக்கவில்லையா? அவள் தன்னை அவனுடன் பூரணமாக ஐக்கியப் படுத்திக் கொண்டு விட்டாள் என்று ராதிகாவிடம் அவன் பெருமையாகக் கூறியிருக்கிறான். இந்தக் கூற்றின் உண்மை விவாதத்துக்குரியது என்ற நிலைமை உருவாகிவிட்டதோ என்று எண்ணும்போது, சுருதி பிசகாத வாழ்க்கையில் அபஸ்வரம் ஒலித்து விட்டது போல் அவன் சீற்றம் கொண்டதில் ஆச்சரியமில்லை. இது அவனுடைய அசாத்திய தன் முனைப்புக்குச் சவால்... அவன் மீதுள்ள எல்லையற்ற ஈடுபாட்டின் காரணமாக அவளே விரும்பி, அவன் அடிமையாக இருக்கிறாள் என்று அவன் தனக்குத் தானே கற்பித்துக் கொண்ட மானஸீகம் பொய்யாகி விட்டதுதான் அவனுக்கு எரிச்சல் ஊட்டியது.

ஏதாவது ஒரு சமயத்தில் அவள் அவனுக்குத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டுதான் ஆகவேண்டும். அது ஏன் இந்தச் சந்தர்ப்பமாக இருக்கக் கூடாது? இந்த அதிர்ச்சி அவனுக்குத் தேவை.

அருண் தினசரித் தாளினின்று தன் பார்வையை விலக்காமலே கேட்டான்: ''ராதிகா மாதிரி நீயும் இருக்கணும்கிறதுதான் உன் அந்தரங்க ஆசையா விம்மி?''

''ராதிகா எப்படி இருக்கா? அதைப் பத்தி எனக்கு ஒண்ணும் தெரியாது!''

''ஏன் தெரியாது?... அவ கெட்டிக்காரியா இருக்கலாம். ஆனா அவ மாதிரி என் மனைவியும் இருக்கணும்கிறதை நான் விரும்பவில்லை....''

''கல்யாணம்கிறது ஆம்பிளைகளோட விருப்பு வெறுப்பைப் பொறுத்த விஷயம் தானா?''

''வாட் இஸ் யுவர் ப்ராப்ளம் விம்மி?... நீ இன்னிக்கு இப்படிப் பேசறே? எனக் கொண்ணும் புரியலே, மனசுக்குக் கஷ்டமா இருக்கு....'' என்று சொல்லியவாறு அவளருகில் வந்து நின்றான் அருண். பேசினான்:

''ராதிகா சொன்னது நெத்துத்தான்... அவளுடைய தனிப்பட்ட சுதந்திரம் அவளுக்கு முக்கியமான விஷயம்னு. பட்... இன்னிக்கு அவ அழுததைப் பார்த்தபோது, கல்யாணம் ஆனப்புறம் இந்த மாதிரிச் சுதந்திரம் கிதந்திரம்னு பேசறதுக்கெல்லாம் அர்த்தமில்லேன்னுதான் எனக்குப் படறது. ரமேஷ் ராகுல் கிட்ட என்ன சொன்னான் தெரியுமா? ராகுல் அவனுடைய பிள்ளைதானான்னு அவனுக்குச் சந்தேகமாம்... வாட் எ ஷேம்? அவனுக்கு இப்படிச் சந்தேகம் வரக் காரணம் என்ன? ராதிகா இப்படி இருக்கிறதுதான்... அவளுடைய சுதந்திரம் அவளை எங்கே கொண்டு விட்டிருக்கு பாரு....''

''இந்த மாதிரி ஒரு ஆம்படையான் அவளை விட்டுப் போயிட்டான்னா அது ராதிகாவுக்கு நல்லதுதான். அவனுக்கு ஆரம்பத்திலேயே இப்படி ஒரு சந்தேகம்னா அவளை விட்டுப் போயிருக்கலாமில்லையா? இத்தனை நாள் அவளோட இருந்ததோட மட்டுமில்லாமெ, பிள்ளை கிட்டப் போய் இதைப் பத்திச் சொல்லியிருக்கானே, அவனுக்கு வெட்கம், மானம், ஒண்ணும் கிடையாதா?....''

விம்மி குரலை உயர்த்தி இப்படிப் பேசி அருண் பார்த்ததே யில்லை. ராதிகாவின் சுதந்திர உணர்வு அவளை எங்கே கொண்டு விட்டிருக்கிறது என்பதைப் பற்றிப் பேசாமல் ரமேஷைப் பற்றி விம்மி விவரிக்கத் தொடங்கியது அவனுக்கு வியப்பாக இருந்தது. அப்படியானால் ராதிகா இவளைப் பற்றிச் சொன்னது சரிதானா? விம்மிக்குள் இன்னொரு விம்மியா?.... இந்த விம்மியை அவன் ஏன் இத்தனை வருஷங்களாகத் தெரிந்துகொள்ளவில்லை?

''அப்படியானால் உன் அனுதாபம் ராதிகாவுக்குத்தானா?'' என்று கேட்டான் அருண்.

''ராதிகாவை நான் அறிந்து கொண்ட வரையில், அவள் யாருடைய அநுதாபத்தையும் வேண்டி நிற்கிறாள் என்று எனக்குத் தோன்றவில்லை'' என்றாள் விம்மி.

''ராதிகாவைப் பற்றி உனக்கொன்றும் தெரியாது என்று சொல்லிவிட்டு அவள்தான்

உன் கதாநாயகி என்பது போல் நீ பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.''

''ராதிகா சிகரெட் குடிக்கிறாள் விஸ்கி குடிக்கிறாள், ஆண்களுடன் எந்தவித மனத் தடையும் இல்லாமல் பழகுகிறாள்... ஒரு பெண் இப்படி இருப்பதை உங்களுடைய பாரம்பரியப் பண்பாட்டுப் பிரக்ஞை ஏற்றுக் கொள்ளவில்லை. அதனால்தான் ராதிகா வைப் போல் நீ இருக்க விரும்புகிறாயா என்று என்னை ஏளனமாகக் கேட்டீர்கள்.. ஆனால் உங்கள் வியாபார முன்னேற்றத்துக்கு இந்த ராதிகாதான் தேவை. இதைப் பத்தி உங் களுக்கு எந்தவித ஆட்சேபமும் இல்லே. உங்கள் மனைவி என்று வரும்போது எவை யெவை நல்ல குணங்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ, அவற்றின் மொத்த உருவகமாக, பண்பாட்டுக் கருவூலமாக அவள் அமைய வேண்டும் என்று எதிர்பார்க் கிறீர்கள்.... இத்தகைய வெவ்வேறு அளவு கோல்கள்தான் எனக்குப் பிடிக்கவில்லை.''

அருண் மௌனமாக சிகரெட் குடித்த வாறு அவளையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தான். நேற்றுத்தான் அவன் ராதிகா விடம் சொன்னான்:

'என் தனிப்பட்ட வாழ்க்கை எனக்குச் சொந்தமானது. தொழில் என்று வரும் போது சமூக வாழ்க்கை... ஒவ்வொன்றுக்கும் தனித் தனி அளவு கோல் இருப்பதில் என்ன தவறு இருக்கிறது?' இதை 'முரண்பாடு' என்று நேற்று ராதிகா சுட்டிக் காட்டினாள். இன்று விம்மியும் அதைத்தான் சொல்லு கிறாள். அவனைப் பொறுத்த வரையில் இதில் எந்த வித முரண்பாடும் இருப்பதாகத் தெரியவில்லை. அவன் தொழிலுக்காகப் பல அசுத்தமான காரியங்கள் செய்ய வேண்டி யிருக்கிறது. வீடு சுத்தமாக இருக்க வேண்டு மென்று நினைப்பதில் என்ன தவறு?

பெண்கள் வீட்டைத்தான் நிர்வகிக்கவேண் டும் என்று நினைக்கின்ற அவன், தொழில் முறையில் ராதிகாக்களைச் சந்திக்கும்போது, அவர்களை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது. அவனுடைய தனிப்பட்ட கருத்து சமூகச் செயலில் எதற்காகக் குறுக் கிட வேண்டும்?

ஒருவேளை விம்மியும் வேலைக்குப் போக வேண்டுமென்று விரும்புகிறாளோ?

''உனக்கும் வேலைக்குப் போகணும்னு ஆசையாயிருக்கா?'' என்று கேட்டான் அருண்.

''ஏன் வேலைக்குப் போனா தப்பா?''

''உனக்கு நான் ஒரு 'கன்ஸர்வேடிவ்'வாத் தோணலாம். ஆனா என்னைப் பொறுத்த வரையிலும் பெண்கள் வீட்டைத்தான் நிர்வகிக்கணும்கிறது என் அபிப்பிராயம்... 'இல்லத்தரசி' 'மனைவி'ங்கிற வார்த்தைக் கெல்லாம் என்ன அர்த்தம்?''

''ஒரு ஆணோட முகம் சமூகத்திலே தனியாத் தெரியணும்கிறதுக்காக, 'இல்லத் தரசி'ங்கிற பட்டத்தைச் சுமந்துகொண்டு பெண்கள் வாழ்க்கை பூரா வீட்டிலேயே அடைக்கப்பட்டு, முகம் தெரியாம சாகணும் அப்படித்தானே?'' என்று சீறினாள் விம்மி.

அருண் எழுந்தான்.

''என் மனைவி மற்றையப்பெண்களிட மிருந்து வித்தியாசமானவளாக இருக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். ஆனால் நீ....'' என்று அவன் சொல்லி முடிப்பதற் குள் விம்மி குறுக்கிட்டாள்:

''நானும் அப்படித்தான் இருக்க வேண்டு மென்று விரும்புகிறேன். வித்தியாசமான பெண்ணாக... எனக்கென்று ஒரு தனித் தன்மை இருக்கலாம்... அல்லது இல்லாம லேயே போகலாம். தேடுவதில் தப்பில்லே. இந்த முயற்சிதான் வாழ்க்கையைச் சுவா ரஸ்யமாக்குகிறது. நான் இதுவரை உங்கள் திருப்திக்காக வாழ்ந்து வந்திருக்கிறேன்.''

அவள் சொல்லி முடிப்பதற்குள் அருண் இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே கூறினான்: ''இனி... நீ உனக்காக வாழலாம்... எனக்கு ஆட்சேபணை யில்லே.''

(தொடரும்)

---

யார் பெயரை முன்னே போடுவது என்ற பிரச்னையில் டைட்டிலின்றி ஆரம்பிக்கும் பொற்காலம், தற்காலத்தில் வந்திருக்கும் கற் காலக்கதை.

பண்ணையார் விஜயனை 'கணக்கு' கள்ள பார்ட்டும், கையான் டெல்லி கணேஷும் கைப்பாவையாக ஆட்டி வைக்கும் தந்திரங் களில் யுக்தி அதிகம். விஜயன் நடிக்காமல் இருப்பதே பொருத்தமான நடிப்பாய் அமை கிறது. சத்யகலாவும், சத்தாரும் சத்தான நடிப்பு. அசட்டுத்தன வனிதா.

எம். ஜி. ஆரின் வாரிசு எம். ஜி. சி. சுகு மார் சில அசப்புகளிலும், கொஞ்சம் குர லிலும் சித்தப்பாவை நினைவு படுத்தினாலும் மொத்தத்தில் 'மொத்'.

கடனுக்காகப் பெண்ணைக் கொடுக்கும் 'பண்ணை' அனுப்பிய அமீனா வரவால் சித்தம் கலங்கி வீட்டிலிருந்து ஒவ்வொரு பொரு ளாய்க் கொண்டு வந்து ''இந்தா இதையும் எடுத்துக்க'' என்று உடைந்து கோகுல்நாத் உயிரை விடும் காட்சி தத்ரூபம்.

ஆபாசத்திலிருந்து விடுபட்டு அசிங்கமாகப் பேசும் சுருளி. பண்ணை; கலெக்டருக்குச் செய்யும் மரியாதைகள் கலெக்டர்களையே இன்ஸல்ட் செய்கிறது. கடைசியில் சின்னப் பண்ணை குட்டிப் பையன் (நல்ல துடுக்கு) படத்தை முடிக்க உதவுகிறான்.

சண்டைக் காட்சிகளில் காது கிழிகிறது. இக்காலத்தில் இப்படி ஒரு படம் துரையிட மிருந்து வேண்டாம். —நளினி சாஸ்திரி



# விட்டுப்போன வட்டமேஜை வாசகர்கள்

● கல்கி வாசகர் சிறப்பிதழ் ஜஸ்ட் சூபர்ப்! ஒரே இதழில் இந்த அளவுக்கு வாசகர்களுக்கு 'இன்வால்வ்மெண்ட்' வேறு எந்தப் பத்திரிகையும் கொடுத்ததில்லை.
சென்னை-24 எஸ். ராமச்சந்திரன்

● வாசகர் சிறப்பிதழ் என்று பயமுறுத்தியதில் உருப்படியாக இருந்தது அட்டைப் படம் ஒன்றுதான். ம.பொ.சி.யையும் கண்ணதாசனையும், அருள்வாக்கையும் காணவில்லை. மற்றவைகளைப் படித்து எனக்கு ''கண் கலக்கியா'' நோய் வந்து விட்டது. அதற்கான சிகிச்சைக்கு விவரம் தெரிவிக்கவும்!
திருச்சி வ. ஜெயபாலன்

● கடந்த மூன்று வருடத்துக்குள்ளாக 232 வாசகர் கடிதங்கள், 106 கேள்வி. என் படத்தைப் பிரசுரித்துக் கல்கிக்குப் பெருமை சேர்த்துக் கொள்ளவும்.
போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● கல்கியில் மட்டும் வாசகர் கடிதம் பகுதியிலும், கேள்வி பதில் பகுதியிலும் இதுவரை நாற்பது தடவைக்கு மேல் என் பெயர் பதிவாகியிருக்கிறது.
ஈரோடு-10 மேஜர்தாசன்.

(தங்கள் பெயரும் படமும் இடம்பெறவில்லை எனக் குறைப்பட்டுள்ள இதர வட்டமேஜை வாசகர்கள்: பங்களூர் ப. மூர்த்தி; பாதூர் இ. எஸ். ரங்கநாதன்; நிசைமுத்து சார்பாக மதுரை பி. ராஜசேகரன்; மதுரை ரவிராஜ்; திருநெல்வேலி பாரத்வாஜன்; காரைக்குடி அருணு நமச்சிவாயம்.)

● லக்ஷ்மி — சோ — ஜெயராஜ் — பாலகுமாரனை — துருவித் துருவிக் கேட்கும் பேட்டிக் கட்டுரைகள் அத்தனையும் லட்டுக் கட்டுரைகள். கீப் இட் அப்!
சென்னை-45 ஆர். ரவி

● ''கவர்ச்சி இருக்கலாம், ஆனால் அது சம்பந்தா சம்பந்தமில்லாமல் திணிக்கப்பட்டிருக்கக் கூடாது'' என்று ஜெயராஜ் கூறியிருக்கிறார். சிவசங்கரியின் ''47 நாட்கள்'' தொடர் கதைக்கு எழுத்தில் வடிக்காத காட்சிகளை யெல்லாம் ஜெயராஜின் தூரிகை வண்ணக் கலவையில் வாரி வழங்கியது ''திணிப்பு'' அல்லாமல் வேறு என்னவாம்?
சென்னை-13 ந. சந்தானம்

● அட்டைப் படத்தில் மட்டும் பெண் வாசகர்; இதழுக்குள் ஆண் வாசகர்களின் புகைப் படங்கள் — ஏன் சார் இப்படி ஓரவஞ்சனை?
பட்டுக்கோட்டை ஒய். முகமது காசிம்

● ஏன் சார், அட்டைப் படத்தில் உள்ள புத்தகக் கடையில், சென்ற மாத 19—10—80 கல்கி இதழ்களைத்தான் அக்கடைக்காரர் அடுக்கி வைத்திருக்கிறார். இன்னுமா அந்த இதழ்கள் விற்காமல் இருக்கின்றன?
சென்னை-5 எஸ். வி. ராஜசேகர்


எஸ். சையது முகமது


மேஜர்தாசன்

(வண்ணப்படமென்பதால் புகைப்படக்காரருக்கு அவகாசம் தேவைப்படுகிறது. சில வாரம் முன்பாகவே திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டியுள்ளது. —ஆசிரியர்)

● மூகமூடிக்குள் மறைந்திருந்த 'அரக'வின் படத்தை முதல் பக்கத்திலேயே வெளியிட்டு விட்டீர்களே. அந்த வாழும் என்சைக்ளோபீடியாவைப் பற்றி இன்னும் அறிந்துகொள்ள விரும்புகிறோம்.
சாலியமங்கலம் ந. மெய்ப்பொருள்

● 'அல்ப விஷயம்' சிறுகதையில் லாண்டிரி பில், மூக்குத்தி, பிரிஜ், பந்து என்ற நான்கு பொருட்களையும் மற்ற எழுத்தாளர்களைப் போல் கதைக்குள் ஓர் அங்கமாகப் புகுத்தாமல், சந்தர்ப்பத்துக்குத் தகுந்தாற் போல் அடைப்புக் குறிக்குள் எழுதியிருக்கும் புதுமையைப் பாராட்டுகிறேன்.
வள்ளியூர் ஜெ. மீனும்பிகை

● விவாகம் என்று ஒன்று நடந்து முடிந்த பிறகு அந்த நிஜத்தில் வாழ்வதை விட்டுவிட்டு நிழலாகத் தொடர்ந்து வரும் நினைவுகளைத் தொடர நினைப்பது விவேகமல்ல. எஸ். ப்ரியா வாசகரின் சவாலை வெகு அழகாகச் சமாளித்து விட்டார். ம. செ.யின் ஓவியம் கதைக்கு மெருகூட்டுகிறது.
திருநெல்வேலி-11 கே. ருக்மிணி

● சௌந்தரா கைலாசத்தின் 'மூடுபனி' விமரிசனம், விமரிசனமே அல்ல; கவிதை.
ஒண்டிபுத்தூர் சிந்தாமணி ஹக்கீம்

● பொதுவாக ஒரு உருக்கமான கருத்தை நகைச்சுவையுடன் மக்கள் மனத்தில் பதிய வைப்பது மிகக் கடினம். இந்த முயற்சியில் 'வறுமையின் நிறம் சிவப்பு' மூலம் பாலசந்தர் பெரும் வெற்றி பெற்றிருக்கிறார். சந்தானம் அவர்கள் சிந்தித்தால் நல்லது.
சென்னை-5 கே. ஆர். சேதுராமன்

(திரு சந்தானம் அவர்களின் விமர்சனத்துக்குக் கண்டனமும் எதிர்ப்பும் தெரிவித்து ஏராளமான கடிதங்கள் வந்துள்ளன. - ஆர்.)

● வாசகர் மாலதி குப்புசாமி அவர்களிடம் கடுகு சார் கேட்ட கேள்வியை (இலக்கிய பரிசுகளுக்குச் சிபாரிசு) சிறந்ததாக நான் தேர்வு செய்து இருக்கிறேன். தயவு செய்து கடுகு சாருக்கு உரிய பரிசை 'கல்கி' வழங்க வேண்டும்.
வீரபாண்டி வதிலை அன்புச் செல்வன்

வட்ட மேஜை




The Agfa Isoly-II takes perfect snapshots of even split-second action scenes. Close the aperture down to f/11 to get just the right fraction of light to the film. Set the shutter speed at a fast 1/100 second, fast enough to freeze the quickest action. Shoot from a distance of 4 m. on 125 ASA film. The result? Split-second action frozen forever.

The Agfa Isoly-II is a great all-round camera. You simply adjust settings, distance and film to capture every detail, near or distant, of a landscape, get close enough to snap a leopard snarling or take a perfect picture in dim, soft light.

The Agfa Isoly-II is built to German specifications and undergoes over 100 exacting tests.

See this fine camera today at your friendly Agfa dealer.

**Agfa® ISOLY-II**

*for professional results.*

1st for everything in photographics

**AGFA-GEVAERT INDIA LIMITED**

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400 020 • Branches: Bombay New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert, Antwerp/Leverkusen.

SIMOES/AG/7/A/80

# வீட்டில் அணைத்த விளக்கு



## மகரிஷி

### அத்தியாயம் 5

“நீங்கள் சொன்னது போலவே சரியான நேரத்தில் வந்து விட்டீர்கள். நேரந் தவறாமை எனக்குப் பிடித்தமான ஒன்று” என்றாள் சுமங்களா புன்னகையுடன்.

அவனிடத்தில் சந்தோஷம் கரை புரண்டது. அவளும் அதைத்தான் விரும்பினாள்.

அவளுக்கு அவன் விரோதியல்ல. இது வரையில் அவனால் எந்தத் தீங்கும் நேர்ந்து விடவில்லை. தன் அன்பை அந்நியோந்நியமாக்கிக்கொள்ள இவ்வாறு குழைகிறான். இதற்கெல்லாம் பர்வதத்தின் இடைத்தரகு அவனுக்குத் தோதுப்பட்டிருக்கிறது.

தான் காட்டுகிற நேயபூர்வமான அன்புக்குஅவன் எதிரொலியை எதிர்பார்க்கிறான்.

அதை எதிரொலித்துக் காட்டி அவனைப் புரிந்து கொள்ளலாமே!

காரின் கதவைத் திறந்து வைத்தபடி நின்றான்.

''நாம் போகலாமா?'' — சுமங்களா கேட்டாள்.

''எங்கே?'' என்று கேட்டபடி அவளைக் கவனித்தான்.

''நீங்கள் எங்கு விரும்புகிறீர்களோ...!''

''உண்மையாகவா?''

''உண்மையாகத்தான்.''

அவனுடைய உற்சாகம் கார் கிளம்புகிற பாணியில் தெரிந்தது. டிரைவ் இன் ரெஸ்டாரண்டில் டிபனைச் சாப்பிட்டார்கள். புறநகர்ப் பகுதியில் ரயில்வே லைன் ஓரமாக உள்ள பிரதான சாலையில் நிதானமான வேகத்துடன் கார் ஓடியது.

''நீங்கள் இவ்வளவு நாளாக எங்கள் வீட்டுக்கு வருகிறீர்களே... உங்களைப் பற்றி ஒரு பகுதிதான் எனக்குத் தெரியும்.''

''ஒரு பகுதி என்றால்?''

''சற்று வசதி படைத்தவர் என்று.''

அவன் இதற்கு நேரிடையான பதில் ஒன்றும் சொல்லாமல் புன்னகை செய்தான்.

''நீங்கள் அருணாசலத்துடன் கூட்டாகச் சேர்ந்து வியாபாரத்தில் ஈடுபடப் போகிறீர்கள். அல்லது அவருக்குப் பொருளுதவி செய்யப் போகிறீர்கள்....''

''இரண்டும் இல்லை....''

''அப்படியானால்....? உங்களைப் பற்றி அவர்கள் இப்படித்தானே எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்?''

''அவர்கள் எண்ணிக் கொண்டிருந்தால் அதற்கு நான் பொறுப்பாளியல்ல. அவருடைய வியாபாரப் பெருக்கத்துக்கு என்னால் முடிந்தால் ஏதேனும் கடனுதவி செய்ய முடியும். செய்யலாம் என்றிருக்கிறேன். ஒரு பேரமாகத்தான் இன்றுவரை அதைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன். அது ஒரு 'டீல்' ''

'இவன் ரொம்பவும் ஜாக்கிரதையானவன்; சற்றே கடுமையானவன்; இலகுவில் ஏமாறக் கூடியவனாக இருக்க மாட்டான். அதே நேரத்தில் பிறரைக் கவர இவன் செய்கிற சாகசங்களிலிருந்து அவர்கள் தப்பவும் முடியாது' என்று எண்ணிக் கொண்டாள் சுமங்களா.

''இப்பொழுது இந்தச் சமாசாரமும் கூட 'டீல்' மாதிரிதானா?'' அவள் புன்னகைத்து அதனிடையே சொற்களை விரவினாள்.

சாலையிலிருந்து பார்வையைச் சில கணங்கள் அவள் மீது படர விட்டான். மீண்டும் பார்வையைச் சாலைப் பக்கம் திருப்பினான்.

அருகில் போகிற இரயில்வே லைனில் எதிரும் புதிருமாக இடையறாது மின்சார இரயில்கள் ஓடிக்கொண்டிருந்தன.

''நீ இதை எப்படி இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறாய்?''

''நான் இதை ஒரு டீலாக எடுத்துக் கொள்ள முடியுமா? எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?''

''நான் எதையுமே அனுமானிப்பதில்லை.''

''அப்படியென்றால்....?''

''தீர்மானிக்கிறவனாகவே வளர்ந்துவிட்டேன். வாழ்க்கையில் எதையும் எப்பொழுதும் அனுமானித்துக் கொண்டிருப்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை.''

கார் கிட்டத்தட்ட பழவந்தாங்கல் வரை வந்து விட்டது. பின்பு ஒரு சிறிய மண் சாலையில் பிரிந்து ஏரி போன்ற ஆனால் ஏரி என்று இல்லாத நீர்த் தேக்கம் ஓரமாக ஓடியது.

ஆங்காங்கு வீடுகள் தெரிந்தன. சிலவற்றில் பாதி வேலைகள் நடந்து கொண்டிருந்தன. வீட்டுக்குப் போடப்பட்ட அஸ்திவாரங்கள் கட்டிடம் எழுப்பப்படும் நிலையில் இருந்தன.

கார் சில நிமிடங்கள் ஓடி அருகில் எவ்வித வீடுகளும் இல்லாத தீவு மாதிரி தென்பட்ட இடத்தில் வந்து நின்றது.

பெரிய காம்பவுண்ட் சுவர்.

இரும்பு கேட் பூட்டப்பட்டிருந்தது.

பரமேசுவரன் காரை நிறுத்தினான்; அதிலிருந்து கீழே இறங்கினான். இரும்பு கேட்டின் பூட்டைத் திறந்தான். பலம்கொண்ட மட்டும் இரும்புக் கேட்டை இருபுறமும் நகர்த்தித் திறந்தான்.

மீண்டும் காருக்கு வந்தான்.

காரை மெதுவாக உள்ளே கொண்டு போய் நிறுத்தினான்.

வாசலின் பிரதான இரும்பு கேட்டைச் சாத்தினன். உட்பக்கமாக வெறுமனே பூட்டை மாட்டிவிட்டு வந்தான். அதுவரையில் கமலங்களா காரை விட்டுக் கீழே இறங்கவேயில்லை.

தான் ஒரு தீவுக்கு வந்திருப்பதைப் போல உணர்ந்தாள். 'எங்கே வேண்டுமானாலும் போகலாம்' என்று ஆரம்பத்தில் இவனுக்குச் சம்மதம் அளித்ததைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு எங்கேயோ தொலை தூரத்துக்கு அழைத்து வந்து விட்டானே! இந்தத் தனிமையில் இவன் நடவடிக்கை எப்படிப்பட்டதாக இருக்கும்? இவனுடைய நிதானத் தன்மையிலிருந்து இப்படிப்பட்ட மனோநிலைகளை நிச்சயம் கணிக்க முடியாது! கணிக்கக் கூடாது!

'தனிமையில் ஒரு மனிதனின் செய்கைக்கும் ஒரு பெண்ணுடன் தனிமையில் இருக்கும் மனிதனின் செய்கைக்கும் அதிக வித்தியாசம் உண்டு. இத்தனை நாளைவிட இந்தத் தனிமையில் இவனைக் கணிப்பதிலிருந்தே தான் இவனுடைய குணங்களைத் தீர்மானிக்க முடியும்.'

அவளுடைய மனம் பலவாறு சிந்தனை வசப்பட்டது.

அவன் வந்து காரின் கதவைத் திறந்து விடும்வரை காரிலேயே இருந்தாள்.

அவன் மிகுந்த மரியாதையுடன் காரின் கதவைத் திறந்து விட்டான்.

அவள் கீழே இறங்கினாள்.

சுற்றிலும் கண்ணோட்டம் விட்டாள்.

அந்தப் பகுதியே நீர்ப்பிடிப்புள்ள பகுதியாகத் தென்பட்டது. காம்பவுண்டுக்குள் சுவர் ஓரமாக நிறையக் குரோட்டன்ஸ்கள். அவை சுவருக்கு மேலே நீண்டு வளர்ந்திருந்தன. சிமெண்ட் தொட்டி மறைப்புகளுள் சில வகையான செடிகள் தலைகாட்டிக்கொண்டிருந்தன.

அழகிய சிறு பங்களா பாணியில் வீடு. கண்ணாடி ஜன்னல்கள் மூடப்பட்டிருந்தன. முன்புறம் போர்டிகோ இருந்தது. அவனைத் தொடர்ந்து அவள் போனாள். அவன் தன் பேண்ட் பாக்கெட்டிலிருந்து சாவியை எடுத்து வீட்டின் கதவைத் திறந்தான்.

இருவரும் உள்ளே நுழைந்தார்கள்.



சிறிய வரவேற்பு அறை. இருபுறமும் சோபாக்கள். டீபாயில் மலர்க் கொத்து. புத்தக அலமாரி. தரையில் கார்பெட் விரிப்பு. சுவரோடு சுவராக இருந்த கண்ணாடி அலமாரிகள் காலியாகவே இருந்தன.

அதைக் கடந்து உள்ளே வந்தாள். பங்களாவெங்கும் அவளே சுற்றிப் பார்த்தாள். பங்களா துப்புரவாகவும், அதே நேரத்தில் அண்மையில் கட்டி முடிக்கப்பட்டது போலவும் இருந்தது.

''வா... உட்கார்!''

அவளுடைய அனுமதியோ ஆமோதிப்போ இல்லாமல் கரத்தைப் பற்றி லேசாக இழுத்து அவளைச் சோபாவில் உட்கார வைத்தான்.

ஃப்ரிட்ஜைத் திறந்தான்.

உள்ளே ஏராளமான பாட்டில்கள்.

''என்ன வேண்டும்...? லெமன், ஆரஞ்சு... பைனாப்பிள்.....''

வரிசையில் அவள் ஒவ்வொன்றாக ஒதுக்குவது பாட்டில்களின் உரசலில் தெரிந்தது.

பைனாப்பிள் பாட்டிலை எடுத்துக் கொண்டு ஃப்ரிட்ஜை மூடினான்.

பாட்டிலின் மூடியைத் திறந்து அதில் ஒரு ஸ்ட்ராவைப் போட்டு அவளிடம் நீட்டினான்.

அவன் கேட்டிருந்த கேள்விகளுக்குண்டான பதில் இன்னும் அவளிடமிருந்து வரவில்லை. ஸ்ட்ரா மூலம் ஃபைனாப்பிளை உறிஞ்சிக் கொண்டே தன்முன் நெருக்கமாக நிற்கும் பரமேஸ்வரனைப் பார்த்தாள்.

'இவன் நம்மைத் தொடுவதற்கு எப்படி அனுமதித்தோம்? இதென்ன மனம்? இப்படி கணத்துக்குக் கணம் சரணாகதியை நோக்கிச் சரிந்து கொண்டிருக்கிறது?

'இவன் கொடுத்த புடவை என்று தெரிந்து கொண்ட பிறகும் இதனைக் கட்டிக்கொண்டோம். இவன் தனியே எங்காவது அழைத்துக்கொண்டு போவான் என்று தெரிந்தும் இவனுடன் வந்தோம். ஜன சந்தடியை விட்டு கார் வெகு தூரம் வருகிறது என்பதைத் தெரிந்து கொண்டே மௌனமாக இருந்தோம். கரத்தைப் பற்றி இழுத்துச் சோபாவில் உட்கார வைத்ததைக்கூட என் மனம் சாதாரணப் போக்கில் ஏற்றுக் கொண்டு விட்டதே!

'நேற்று கண்ணாடி முன் நின்று கொண்டிருந்தபோது சுதந்திரமாக என்னை முழுமையுடன் அணைத்துக் கொண்டானே! அதற்குப் பிரமாதமாக நான் என்ன எதிர்ப்புத் தெரிவித்துவிட்டேன்? ஒன்றுமில்லையே....?'

மனம் ஒருமுறை அவளிடமே பரிசீலனை பெற்றது.

பேச்சை வேறு திசையிலிருந்து ஆரம்பித்தாள் சுமங்களா. ''அருணாசலத்தை உங்களுக்கு எப்படிப் பழக்கம்?''

''அவர் எனக்கு நிறையப் பணம் கடன் தர வேண்டும். அவருடைய வியாபார அபிவிருத்திக்காகக் கொடுத்தேன்.''

அவள் உறிஞ்சிக் கொண்டிருந்த பைனாப்பிள் கசப்பாகிப் போனதாக இருந்தது.

''உண்மையாகவா?''

''ஆமாம்....''

''அதை நீங்கள் இரும்பப் பெற முயன்றதாகவே தெரியவில்லையே...!''

''அவர்களால் அதை இப்பொழுது இருப்பித் தர இயலாது. அது எனக்குத் தெரியும். வியாபாரத்தில் நொடிந்து போய் விட்டார்கள்.''

டீபாயின் மேல் ஜூஸ் பாட்டிலை வைத்து விட்டு எழுந்தாள். வெளிப்புற ஜன்னலருகில் வந்து நின்றாள்.

அவளுக்குப் பின்னால் நெருக்கமாக வந்து நின்றான் பரமேஸ்வரன்.

அவனுடைய நிழல் தன்மேல் படிவதை உள்ளுணர்வாக அறிந்து கொண்டாள்; அங்கிருந்து விலக எத்தனித்தாள்.

நேற்று செய்தது போலவே இன்றும் அவளின் பின்புறம் கைகளைக் கொண்டுவந்து கட்டிக்கொண்டான்.

''என்மேல் நீங்கள் வைத்துள்ள அன்பை நான் எப்படி எடுத்துக் கொள்வது? நல்ல நேயபூர்வமான அன்பாக இது நீடிக்குமா?''

அவன் பதில் கூறவில்லை. கழுத்துப் பக்கம் முத்தமிட்டான்.

அந்த அதீத ஸ்பரிசத்தின் முதல் சிலிர்ப்பை அவளுடைய உடம்பு உணர்ச்சிமயமாக்கிக்கொள்ள வெகு நேரம் ஆனது.

அவளைத் தன் பக்கமாக இழுத்துக் கொண்டான். இமைக்கும் நேரத்தில்... அதன் வேகம் அவளைத் திணற அடித்தது.

''சில விஷயங்கள் பேச சில நேரங்கள்தான் சரியாக இருக்கும். எல்லா நேரத்திலும் எல்லாவற்றையும் பேசி அந்தந்தச் சூழ்நிலைகளின் தன்மைகளைக் கெடுக்கக் கூடாது.''

''இல்லை. நாம் இதை இப்பொழுதுதான் பேசவேண்டும். அதற்கான சந்தர்ப்பமே இதுதான்.''

''நோ'' என்றான்.

அவளைத் தன் அணைப்புக்குள் முற்றிலும் ஆக்கிரமித்துக் கொண்டான். உதட்டின் பயணம் அவள் மீது தொடர்ந்தது.

அவளிடமிருந்த சில சுயநிர்ணயங்கள்... சுய கட்டுப்பாடுகள்... மனத்தை ஒருநிலைப் படுத்திக்கொண்டு இதற்கு முன் அவள் செய்து கொண்ட சபதங்கள் எல்லாம்....

மழையில் அழிந்த கோலங்கள் ஆகிக் கொண்டிருந்தன.

---

''எனக்கு ரூ. 600 சம்பளத்தில் இங்கு வேலை கொடுத்ததற்கு நன்றி. முதல் மாத சம்பளம் தரும்போது ரூ. 10 மட்டும் தாங்க போதும்! மீதியை அடுத்த மாத சம்பளத்துடன் சேர்த்து ரூ. 1190 ஆக பெற்றுக் கொள்கிறேன்!''

''ஏன் அப்படி?''

''முதல் மாத சம்பளத்தை அப்படியே பிள்ளையார் கோவில் உண்டியலில் போடுவதாகப் பிரார்த்தனை!''



சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா
சுஜாதா சுஜாதா

சுஜாதா எழுதும்
புதிய தொடர் கதை
கல்கி ஜனவரி 4உ
'81 ஸ்பெஷல்
அதிக பக்கங்கள்
தண்ணீர் - முழு நீள நாடகம்
உலகத் தமிழ் விழா
— சிறப்பு மடல்

☆ சிறு கதைகள்

இருபத்தைந்து வயதுவரை அவள் மிகவும் கட்டுப்பாடுடன் வளர்ந்தவள். அவளை அவ்வாறு கட்டுப்பாடுடன் யாரும் வளர்க்கவில்லை தான். ஆனால், அவளாகவே தனக்குள் கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொண்டாள்.

அவளுடைய தோழிகளில் பலர் தங்கள் இச்சைகளை எப்படி வெல்லாம் பூர்த்திசெய்து கொள்கிறார்கள் என்பது அவளுக்குத் தெரியும்.

தளர்ச்சி என்பது வாலிபத்துக்கும் உண்டு. அது உரிய காலத்தில் உரிய கவனிப்பைப் பெறாதபோது தன் கட்டுப்பாடுகளைத் தளர்த்திக்கொள்கிறது; கடிவாளங்களை அறுத்துக் கொண்டு தானே விடுபடுகிறது.

இந்த வகையில் ஒரு மீரா... ஒரு ரீடா... ஒரு அகிலா — இப்படிப் பலரின் தளர்ச்சிகளை சுமங்களா அறிந்துள்ளாள்.

"வரம்புகள் என்பவை வரையறுக்கப்பட்ட வாழ்க்கைக் கோட்டுக்குள் இருக்கும்வரையில் கட்டுப்பாடாக இருக்கிறது. அவை உடையும் போது தத்துவங்கள் காற்றில் பறந்துவிடுகின்றன.

"எல்லாத் தேக்கங்களுக்கும் எல்லை என்பது ஒன்றுண்டு. எல்லை மீறும்போது, உடைப்பு தவிர்க்க முடியாததாகிவிடுகிறது" —அகிலா இப்படிக் கூறுவாள். இதுமட்டுமா? இன்னும் என்னென்னவோ கூறுவாள்.

அந்தக் காட்சி இப்பொழுது திடீரென்று நினைவுக்கு வந்தது.

கோமதி மூலமாக அறிமுகமானவள் அகிலா. பழக, பேச இனிமையானவள். அழகி. குடும்பத்துடன்தான் இருந்தாள். வீட்டில் ஏராள பொறுப்புக்கள். ஓர் அரசாங்கத்தைக் கட்டிக் காக்க வேண்டிய பொறுப்பு.

இவைகள் உணர்ச்சிக்கு உட்படாதவை. அவளுக்கு விவாகம் செய்து கொள்ள ஆசை தான். ஆனால், சூழ்நிலை சரியில்லை.

அவளுடைய 'பாய் பிரண்ட்' — அவன். ஒரு கல்லூரி மாணவன்; பணக்காரன். அலுவலக நேரம் போக மீதி நேரங்களிலும், விடுமுறை தினங்களிலும் அவள் அவனுடன் ஹோட்டல் அறையில் தங்கிவிடுவாள். இதற்காக அவள் அதிகம் மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்க மாட்டாள்.

அன்று—

கோமதியின் பம்பாய் தோழி ஒருத்தி தன் கணவனுடன் சென்னை வந்திருந்தாள். அவள் அதே ஹோட்டலில்தான் தங்கியிருந்தாள். வந்தவுடனேயே அவளை அறிமுகப்படுத்தியிருந்தாள், கோமதி. ஒரு வார காலமாகச் சென்னையில் தங்கிய அவளுக்குக் கோமதியும் அவளும் கம்பெனி கொடுத்தார்கள்.

அப்படிப்பட்ட நாட்களில்தான் அகிலாவைச் சுமங்களா தற்செயலாகப் பார்த்தாள்.

அவளுடைய அறையைத் தாண்டும்போது சன்னலின் இடைவெளி வழியே அவளைப் பார்த்தபோது சுமங்களாவுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

அவளுடைய அழகிய உடம்பை அந்த வாலிபன் எப்படித் தழுவிக் கொண்டிருந்தான்! அந்த அவசரம்... அந்த வேகம்.. அந்த வெறி!

இப்போது — சுமங்களாவை....

பரமேசுவரன் அவளுடைய இடுப்புக்குக் கீழே கையை வைத்து அணைத்துக்கொண்டிருந்தான். அவளுடைய கரங்கள் அவ



மானேஜர்: "இந்தாங்க மிஸ்டர் முனுசாமி! கொஞ்சம் தண்ணி கொண்டாங்க...!"

பியூன்: "எம்.ஏ.பி.டி. படிச்சிருக்கேன்ங்கிறதுக்காக பியூனா எனக்கு நீங்க தருகிற மரியாதை என்னைச் சித்திரவதை செய்யுது ஸார்...

உ. ராஜாஜி

னுடைய முதுகுக்குப் பின்னால் இருந்தது. முகம் அவனுடைய முகத்தில் பதிந்திருந்தது.

"என்னை உங்களுக்குப் பூரணமாக அர்ப்பணிக்க வேண்டுமென்றால்... நீங்கள் இதற்குப் பதில் சொல்ல வேண்டும்."

"என்ன பதில்?"

"என்னை நீங்கள் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்."

"கல்யாணமா?"

"ஆமாம்...."

"இல்லையென்றால்?"

"இனி இல்லை என்கிற பேச்சுக்கே இடமில்லை. சொல்லுங்கள்...."

"என்ன சொல்ல வேண்டும்?"

"என்னை நீங்கள் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்".

"இப்படியே இருப்போமே....!"

"எத்தனை நாட்களுக்கு....?"

"நாம் பரஸ்பரம் விரும்பும்வரை..."

"அது கூடாது...."

அவளை அப்படியே தூக்கிக் கொண்டு கட்டிலுக்கு வந்தான்.

அவனுடைய இரண்டு கைகளிலும் கண்கள் செருக மயங்கிக் கிடந்தாள்.

அவனுடைய எல்லாச் செய்கைகளிலும் ஆண்மையின் அடங்கா வேகம் தொடர்ந்தது.

அவனுடைய எல்லாச் செய்கைகளிலும் ஆண்மையின் ஆளுமையே இருந்தது.

இன்ப முகிழ்வில் அவள் அயர்ந்து போய்க் கிடந்தாள்.

அவனை அவளால் மனப் பூர்வமாக வெறுக்க முடியவில்லை. மனப்பூர்வமாக வெறுக்கத் தான் போட்டுக் கொண்ட கட்டுப்பாடுகள் வேஷமும், போலித்தனமுமானவை என்று அவளுக்கே புரிகிற மாதிரி இருந்தது.

ரகசிய ஏக்கங்களும்
உடம்பின் தாகங்களும் தணிந்து
லேசாகிப் போனதுபோல்....
மனம் இருந்தது.
இது என்ன மாயை?
இது, எப்படி நேர்ந்திருக்க முடியும்?
ஏன் நேர்ந்தது?

உள்ளம், உணர்வு, உடல் இவைகளின் அங்கீகரிப்பு இல்லாமல் இது தன்னிச்சையாக நடந்துவிட்டது என்று எப்படிச் சொல்ல முடியும்?

(தொடரும்)




# தங்கம் பூசிய இரும்புத் துண்டு

**திருமுருக கிருபானந்த வாரியார்**

கச்சபேச முதலியார் என்றால் அழுத பிள்ளை வாய் மூடும். அந்த மாவட்டம் முழுவதும் அவருடைய புகழ் பரவியிருந்தது. அவருக்கு நிரம்ப நிலபுலன்கள் இருந்தன. பெரிய தென்னை, மாந்தோப்புக்கு நடுவில் வானளாவிய மாளிகை இந்திர பவனம்போல் இருந்தது. பங்களாவைச் சுற்றிப் பல பழமரங்கள் வானளாவி நின்றன. தோட்டக்காரர்கள் பலர்; காரோட்டிகள், காவலர்கள், சமையல்காரர்கள், பசுமாடுகள், விருந்தினர்கள். அந்த வீடு நித்ய கல்யாணம் போல் விழாக் கோலம் பூண்டு விளங்கியது.

கச்சபேச முதலியாருக்கு இத்தனை இருந்தும் குழந்தை இல்லை. அந்த வீட்டில் கட்டில்கள் இருந்தன. தொட்டில் மட்டும் இல்லை. வீட்டரசி விசாலாட்சி அம்மாள். தங்க நிறம், மான் விழியும், தேன் மொழியும் உடையவள். அந்தப் பங்களாவில் இலட்சுமியே மானிட வடிவில் வந்து உலாவுவது போல் காட்சியளித்தாள்.

அந்த அம்மா நுங்கம்பாக்கம், அபிராமி சில்க் மாளிகை போய், விலை உயர்ந்த பட்டுப் புடவைகளை எடுத்து வந்து, தினமும் ஒரு புடவையை உடுத்துக்கொள்ளுவாள். வீட்டுக்கு வந்தவர்களை அகமும் முகமும் மலர்ந்து வரவேற்று உபசரிப்பாள்.

ஒரு நாள் அவர்கள் மாளிகைக்கு எம்.எல்.ஏ மூவர் எம். பி. இருவர், மற்றும் பெரிய பதவியில் உள்ளவர்கள் அங்கு வந்தார்கள். வந்தவர்களை கச்சபேச முதலியாரும், வீட்டு அரசி விசாலாட்சி அம்மாளும் வரவேற்று விருந்து வைத்து இனிது உபசரித்தார்கள். பசு நெய்யால் தயார் செய்த முதல் தரமான உணவுகள், அந்நாசிப் பழம், மோர்க் குழம்பு, பலாப் பழம் ரசம், பால் பாயசம், கட்டித் தயிர், ரா[illegible] நெல்லிக்காய் ஊறுகாய். வந்தவர்கள் அமிர்தம் போன்ற சுவையான உணவுகளை வயிறு புடைக்க உண்டு வந்தார்கள்.

கூடத்தில் சிறந்த ஆசனங்களில் அமர்ந்து வாரப் பத்திரிகைகளையும் செய்தித் தாள்களையும் படித்தும், அரசியலைப் பற்றிப் பேசியும் மகிழ்ந்தார்கள்.

விசாலாட்சியம்மா உணவு செய்துவிட்டுப் படுக்கையறை (ஏர்-கண்டிஷன்)யில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து சற்றுக் கண்ணயர்ந்தாள்.

சமையல்காரர்கள் சாப்பிட்டு விட்டுத் தங்கள் இருப்பிடம் போய்விட்டார்கள். அப்போது பகல் மணி இரண்டு. வீதியில் ஒரு பழுத்த சிவனடியார்; நெற்றியில் திருவெண்ணீறு; மார்பில் உருத்திராட்ச மாலை. சிவந்த மேனி, சடையுடன் ''அம்மா! நான் அருந்த பசி; அருந்த பசி'' என்றார்.

அடியவர் குரலைக் கேட்ட கச்சபேச முதலியார் திடுக்கிட்டு எழுந்தார். சுவாமிகளைத் திண்ணையில் இருக்கச் செய்து, உள்ளே சென்றார். மனைவி அயர்ந்து உறங்குவதைப் பார்த்தார். சமையலறைக்குச் சென்று பார்த்தார். எல்லாப் பாத்திரங்களும் அலம்பிக் கவிழ்த்து வைத்திருந்தன. ஒரு மூலையில் அலுமினியப் பாத்திரத்தில் முந்தாநாள் பழைய சோறு புளிச்ச நாற்றம் அடித்துக்கொண்டிருந்தது.

முதலியார் வெளியே வந்து, ''சுவாமீ! பழைய சோறு சாப்பிடலாமா?'' என்று கேட்டார்.

சுவாமிகள், ''அன்பா! தனவந்தன் வீடு தீப்பிடித்து எரிந்தால் பன்னீர் விட்டுத்தான் அணைக்க வேண்டுமா? தண்ணீர் விட்டால் தீ அணையாதா? 'கனியேனும் வறிய செங்காயேனும் உதிர் சருகு கந்தமூலாதியேனும், கனல்வாதை வந்தெய்த அள்ளிப் புசித்து' என்கின்றார் தாயுமானார். இருக்கிறதை இடு'' என்றார்.

முதலியார் பழைய சோற்றை* எடுத்து வரும்போது வாசற்படி தட்டியது. அந்த ஓசை கேட்டு விசாலாட்சியம்மா விழித்துக் கொண்டாள்.



''இந்தச் சோற்றை எங்கே, எதற்காக எடுத்துப் போகின்றீர்?'' என்று சற்று உரத்த குரலில் கேட்டாள்.

முதலியார்: ''அதோ ஓர் ஏழை சன்னியாசிக்குப் பசி காதை அடைக்கின்றதாம். அவருக்கு இதைத் தரக் கொண்டு போகின்றேன்''

அந்த அம்மாவுக்குச் சீற்றம் பொங்கி எழுந்தது. ''ஏனுங்க, உங்களுக்கு அடியார் பெருமை தெரியவில்லையா? அடியார்க்குப் பழைய சோறு படைக்கலாமா? ''நம்பரடியார் அடியார் அடைந்தால் நல்ல திரு அமுதளித்து'' என்று காரைக்காலம்மையார் புராணத்தில் பிரபு சேக்கிழார் பெருமான் கூறுகின்றாரே? நீங்கள் பெரிய புராணம் படிக்கவில்லையா? முற்றாத கருக்காய் நெல்லை வயலில் இட்டால் முளைக்குமா? முற்றிய மணியான நெல்லை இட்டால்தானே முளைக்கும்? அதுபோல் அடியார்கட்கு உயர்ந்த அன்னம் நெய் பாலுடன் தருவதுதானே நியாயம்? வேறு உணவு இல்லையென்றால் நான் புதிதாகச் சமைக்க மாட்டேனா? இந்த உடம்பு எதற்காக இருக்கிறது? அடியார்க்கிட்டது ஆண்டவனுக்கு இட்டது ஆகுமே!'' என்று பலப் பல அறிவுரை கூறினாள். கணவன் கையிலிருந்த பழைய அன்னத்தைக் கொண்டுபோய் உள்ளே வைத்தாள்.

மின்சார அடுப்பை ஏற்றி ஒரு ஆழாக்கு சீரகச் சம்பா அரிசி அன்னத்தை மல்லிகை அரும்புபோல் வடித்தாள். காயமிட்டு எலுமிச்சம் பழம் ரசம், மிளகு சீரகம் இட்டுத் தயாரித்தாள். பருப்புத் துவையல் அரைத்தாள். அடியாரை இருக்கச் செய்து அன்னம் பரிமாறி உண்பித்து உபசரித்து அனுப்பினாள்.

அங்கிருந்த எம்.எல்.ஏ.,. எம்.பி. முதலிய அனைவரும் அந்த அம்மாவை வாயாரப் பாராட்டினார்கள். ''சார்! உங்கள் மனைவியார் ஆயிரம் மாற்றுத் தங்கம். ஓர் ஏழை சந்நியாசிக்காக, தன் உடல் வருத்தத்தைப் பாராமல், தானே சமைத்து அடியாருக்கு அன்னம் படைத்தாரே! ஆஹா! உங்கள் ஜாதகத்தில் ஏழாமிடம் வியாழன் இருக்க வேண்டும். இப்படி மனைவி வாய்ப்பது அரிது அரிது. நீர் மிகக் கொடுத்து வைத்தவர். பாக்கியசாலி!'' என்று வாயார வாழ்த்தினர். இதனைப் படிக்கின்ற நீங்களும் வாழ்த்துவீர்கள். எல்லாரும் போய்விட்டார்கள்.

கச்சபேச முதலியார் ''விசாலம், ஒரு ஏழைப் பிரதேசிக்காக மெய் வருத்தம் நோக்காது சமைத்து உணவு படைத்த உன் குணம் பால் கடல் போன்றது. அந்தப் பழையதை எடுத்து மாட்டுத் தொட்டியில் விட்டு விடட்டுமா?'' என்றார்.

விசாலாட்சி, ''பேசாமல் இரும். மாட்டுத் தொழுவத்தில் உட்கார வைத்திருக்கிற உங்கள் தாயாருக்காக அந்தப் பழையதை வைத்திருக்கிறேன். நீர் இதில் தலையிடாதீர்!'' என்றாள்.

அவர் அப்படியே அயர்ந்து நின்றுவிட்டார். தங்கம் பூசிய இரும்புத்துண்டு இவள் என்று எண்ணிப் பெருமூச் சுவிட்டார். அவர் மனம் பட்ட வேதனைக்கு அளவே இல்லை.

# ஆயிரம் ரூபாய் பெறும் அசோக்குமார்



செப்டம்பர் மாத கல்கி இதழ்களில் நான்கு புதிர்களைக் கொடுத்து விடைகள் கேட்டிருந்தோம். நான்கு விடைகளையும் சரியாக எழுதிய ஒரே நபர் திரு எஸ். அசோக்குமார். இவர் ரூபாய் ஓராயிரம் பரிசைத் தட்டிக் கொண்டு போகிறார்.

சரியான விடைகள்:

1. பந்து இருக்கும் இடம் :



2. நவரத்தினம் — ஸ்ரீபிரியா
3. ஆரோக்கிய நாசினி
4. கார்ட்டர்

மதுரை, பொன்னகரம் பிராட்வே, நெ. 1, (மாடி)யில் வசிக்கும் அசோக்குமார், மதுரையில் நான்கு தலைமுறைகளுக்கு மேலாகப் பிரசித்தி பெற்ற யானைக்கல் நாயுடு குடும்பத்தில் பிறந்தவர். 19 வயதான அசோக்குமார் தற்போது யாதவா கல்லூரியில் பி.எஸ்ஸி படித்து வருகிறார்.

# இடைவெளிகள்

எம்.ஏ. சுசீலா

நீமாவின் அன்றைய பொழுது ஒரு செல்லச் சிணுங்கலோடு அழகாகப் புலர்கிறது. போர்வையிலிருந்து நீண்டு வெளிப்பட்ட அவளது தந்த நிறக் கரங்கள், காப்பிக் கோப்பையை மெள்ள ஏந்தி உதட்டருகே கொண்டு செல்ல,

''என்ன மம்மி!... இன்னிக்கு என்ன அவசரமாம்? ஏழு மணிக்கே என்னை எழுப்பறீங்க?'' என்று தன் தாயை உரிமையாகக் கடிந்து கொள்கிறாள்.

''நீதானேம்மா ஏதோ ஸ்பெஷல் க்ளாஸ் இருக்குன்னு சொன்னே?''

''ஓ! ஹெல் வித் த ஸ்பெஷல் க்ளாஸ்'' என்றபடி பாத் ரூமுக்குள் நுழைந்து கதவைத் தாளிடுகிறாள் நீமா.

● ● ●

● விடிகாலை நாலு மணிக்கு வரும் சைக்கிள் பால்காரன் எழுப்பும் மணியோசை, கவரோரமாய்ப் பாயில் சுருண்டு கிடந்த மாலாவின் நாடி நரம்புகளில் முறுக்கேற்ற, சோர்வை ஒரு நொடியில் உதறிக் கொண்டவளாய் 'விருட்'டென எழுகிறாள். இரண்டே அறைகள் கொண்ட அந்த 'போர்ஷ'னின் 'டிராயிங்-கம்-பெட் ரூமாய் இருந்த அந்த ஹாலில் தலைமாடு கால்காடாய்க் கிடக்கும் மனித உருவங்களை மிதித்து விடாமல் ஜாக்கிரதை உணர்வோடு தாண்டிச் சென்று சுவரோரம் அலம்பிக் கவிழ்த்து வைத்திருக்கும் பாத்திரத்தை எடுத்துப் பாலை வாங்கிக் கொண்டு சமையலறைக்குள் வருகிறாள்.

பல் தேய்த்து, முகம் கழுவிக் காப்பிக்கு வெந்நீர் வைத்து 'டிகாக்ஷன்' இறக்கிப் பாலைக் காய்ச்சி முடித்து விட்டுக் 'குக்க'ரையும் அடுப்பில் வைத்த பின், தனக்கொரு தம்ளர் காப்பியைச் சூடாகக் கலந்து வைத்துக் கொண்டு 'பாங்கிங்' நோட்டைப் பிரிக்கிறாள். இடையே ஒரு முறை சமையலறை வெளிச்சம் ஹாலில் படுத்திருப்பவர்களுக்கு இடைஞ்சல் செய்யாமலிருக்க, நடுக் கதவை மூடிவிட்டு வருகிறாள். காலைக் குளிருக்கு இதமாக அடுப்புச் சூட்டில் காய்ந்தபடி கொஞ்ச நேரம் பாடத்துடன் ஒன்றிப் போகிறாள்.

● ● ●

● ' ''இன்னும் ஒரே ஒரு இட்லி போட்டுக்க நீமா!''

''போங்க மம்மி! 'லாஸ்ட் மன்த்' வெய்ட் பார்த்ததிலே நான் ஒரு கிலோ கூடியிருக்கேன்! அப்புறம் 'பிகர்' என்னத்துக்கு ஆகிறது? காலேஜ் ஸ்டூடண்டா லட்சணமா இருக்க வேண்டாம்?''

''என்ன லட்சணமோ போ!... மத்தியானம் கொடுத்தனுப் பறதையாவது மிச்சம் வைக்காமச் சாப்பிடு.''

''பாப் தலையும், பெல்ஸ் காலும் 'இன்ஸ்டண்ட் மேட் மணமுமாய்த் தயாராகி வந்தவள் 'போர்டிகோ நீளத்துக்கு ஓடிவரும் அந்த பென்ஸ் காரின் பின்புற இருக்கையில் இடது ஓரமாய்ச் சரிந்து அமர்ந்தபடி கையிலுள்ள 'ராபின்ஸை'ப் பிரிக்கிறாள்.

● ● ●

● ''ஏம்மா! இப்ப இந்த ஆஸ்த்மா இழுப்போட அவஸ்தைப்பட்டுண்டு நீ அவசியம் எழுந்து வரணுமா?''

''அது கெடக்கு போடி!, ஒரு நாளைப் போல வியாதி கொண்டாடிக் கொண்டாடி எனக்கு அலுத்துப் பேச்சு! அதைச் சாக்கு வச்சுக் காலம்பற எழுந்துண்டு செய்யற வேலையெல்லாம் உன் தலையிலே கட்டியாச்சு. மணி ஆறாகப் போறது. இப்பக் கூட நான் எழுந்து மிச்ச வேலையைப் பார்க்கலேன்னா நீ காலேஜுக்குக் கிளம்பறதுமா, வேண்டாமா?''

மனமில்லாமல் பாக்கி வேலைகளை அப்படியே விட்டுவிட்டு எழுந்திருக்கிறாள் மாலா. அதற்குள் காலை ஏழு மணியோடு தண்ணீர் நின்றுவிடப் போகிறது என்ற தகவல், பக்கத்துப் போர்ஷன்காரரிடமிருந்து அஞ்சலாக, இருக்கிற அண்டா, தவலை, டிரம், வாளி எல்லாவற்றிலும் அவசரமாய்த் தண்ணீரை நிரப்பி வைத்துவிட்டு, அவளும் குளித்து விட்டு வருகிறாள். உடை உடுத்தித் தயாராகிற இடைவெளியில் குழம்புக்குத் தேங்காயரைத்து, அப்பாவுக்கு வெந்நீர் விளாவி வைத்து, அண்ணன் சுந்தரின் சட்டைப் பட்டனை அவசரமாய்த் தைத்து, தங்கைக்குத் தலைவாரிப் பின்னி, அவரவர் டிபன் பாக்ஸ்களில் மதிய உணவை நிரப்பி... அஷ்டாவதானியாய்ப் பம்பரமாய்ச் சுழல்கிறாள்.

● ● ●

● 'நீமாவின் படகுக் கார் மெள்ள நீந்திப் பீச் ரோடில் சங்கமிக்கும் நேரத்தில் ஓர் உறுமலுடன் எதிர்ப்படுகிறது மனோஜின் ஜாவா.

''ஹாய்!''

''ஹாய்!''

அர்த்தபுஷ்டியோடு காரை நிறுத்தும் டிரைவருக்குப் பார்வையாலேயே நன்றி சொல்லியபடி காரை விட்டிறங்கி ஜாவாவில் சேர்ந்து கொள்கிறாள் நீமா.

'என்னம்மா ஏதோ ஸ்பெஷல் கிளாசன்னு சொன்னப்பலே! ஹூம்! பெரிய இடத்து விவகாரம். நமக்கேன் பாடு!' டிரைவர் வண்டியைத் திருப்புகிறான்.

● ● ●

● தானே துவைத்துக் கஞ்சி போட்டு மடித்து வைத்த வாயில் புடவையைச் சுற்றிக் கொண்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி ஓட்டமும் நடையுமாய் விரைகிறாள் மாலா. வீட்டை ஒட்டியே ஒரு ஸ்டாப்பிங் இருந்தாலும் சற்று எட்டியுள்ள அடுத்த நிறுத்தம் வரை போய் விட்டால் இருபது பைசாதான் என்பதால், தேவை ஏற்பட்டாலொழியப் பக்கத்திலுள்ள ஸ்டாப்பை அவள் பயன்படுத்துவதில்லை. 'மகளிர் மட்டும்' என்ற சிவப்பெழுத்துக்களைத் தாங்கிய வெள்ளை நிற பஸ் கண்ணில் பட்டதும். இன்றைய பொழுதுக்கு பஸ்ஸைக்



கோட்டை விட்டுவிடாத அற்பச் சந்தோஷம் அவளுள் பிறக்கிறது.

● ● ●

● 'சரியாகமணிபத்தடிக்க ஐந்து நிமிடங்கள் இருக்கையில், மனோஜின் ஜாவா, அந்தப் பெண்கள் கல்லூரியினுள் நுழைகிறது. பட்டாம்பூச்சி போல் படபடக்கும் இமைகளுடன் சில ஸ்லீவ் லெஸ்களும் 'கஃப்தான்'களும் அவனை எதிர்கொள்ளுகின்றன.

''ஹேய் நீமா! அதுதான் உன் பாய் ஃப்ரண்டா டா கண்ணு?''

''ஹீ இஸ் ஃபெண்டாஸ்டிக்பா!''

''ஹீ லுக்ஸ் லைக் அமிதாப்.''

● ● ●

● ''மாலா! நான் இன்னும் 'அஸைன்-மெண்ட்' எழுதி முடிக்கலை! உன்னுடையதைக் கொடு. ஒரு 'கிளான்ஸ்' பார்த்துட்டுக் கொடுத்துடறேன்.''

''வீட்டிலேயும் வேலை செஞ்சிட்டு காலேஜிலே கொடுக்கிற 'ஹோம் ஒர்க்'கையும் பர்ஃபெக்டா முடிக்க உன்னாலே எப்படிம முடியறது?''

● ● ●

● சாப்பாடு நேரத்தில் நீமாவின் குரல் மட்டும் தனித்து ஓங்கி ஒலித்துக்கொண் டிருக்கிறது.

''லுக் கேர்ல்ஸ்! இன்னிக்கு ஆப்டர் நூன் இரண்டு மணிநேரம் பொயட்ரிதான்! மிஸ் \$52 வந்து சரியா அறுத்திடும்! அதிலேயிருந்து தப்பிச்சுக்க ஒரே வழி, நாம பத்துப் பேரும் ஒண்ணு 'ஆப்சென்ட்' ஆகிறதுதான்!''

''இருபது பேர் இருக்கிற கிளாஸிலே பத்துப் பேர் 'ஆப்சென்ட்' ஆனா..., 'ஆட்டோமாடிக்'கா கிளாஸ் கான்சல் ஆயிடும்!''

''ஆப்செண்ட் ஆகிறோம் சரி! ஆப்டர் தட்!.... வாட் இஸ் அவர் பிளான்?''

''ஓ.... நீமாகிட்டே பிளானுக்கா பஞ்சம்? ஸ்ட்ரெய்ட் சஃபையர் அண்ட் தென் டு எ ஹோட்டல்....அண்ட் தென்...?''

''அவுட்டிங் வித் மனோஜ்!....''

● ● ●

● சம்படத்தில் உள்ள மோர் சாதத்தை நார்த்தங்காய்த் துண்டின் உதவியோடு

---

''அவங்க ஆர்க்கெஸ்ட்ராவில் டிரம் வாசிக்கிறவருக்குத்தான் 'ஃபீஸ்' அதிகம்...''

''ஏன் அப்படி?''

''மத்தவங்க தப்பா வாசிக்கிறதை இவர் 'டமார் டமார்'னு அடிச்சி மறைச்சிடுவார்...!''

-கிணத்துக்கடவு ரவி



விழுங்கி முடித்து விட்டு, 'லைப்ரரிக்குப் போகிறாள் மாலா. 'லஞ்ச் அவ'ரில் கிடைக்கும் அந்த ஒரு மணி நேர இடைவெளியில் நூலகப் புத்தகங்களை ஒழுங்காக அடுக்கி வைப்பதால் கிடைக்கும் சிறிய அளவு உதவித் தொகையையும் விட்டுவிட அவளுக்கு மனமில்லை. அம்மாவின் மருந்துக் காவது ஆகுமே என்ற எண்ணத்தோடு, 'எர்ன் வொய்ல் யூ லேர்ன்' திட்டத்தைக் கொணர்ந்த பெரியவர்களை வாழ்த்தியபடி தன் வேலையைச் செய்து முடிக்கிறாள்.

● ● ●

● 'அன்றைய நாளின் கடைசி என்கேஜ் மெண்ட்'டாக மனோஜைத் திரும்பவும் சந்தித்து முடித்துவிட்டு ஆறே முக்காலுக்கு வீடு திரும்புகிறாள் நீமா. ஏதோ ஒரு பார்ட்டிக்குக் கிளம்பிக் கொண்டிருந்த அவள்தந்தை, ''நீமா களைச்சுப் போய் வந்திருக்கா பாரு! குடிக்க ஏதாவது கொடு'' என்று உட்புறம் நோக்கிக் குரல் கொடுக்கிறார்.

''தாங்க் யூ டாட்!'' என்றபடி நீமா தன் அறைக்குச் செல்ல, 'பாமரேனியன்' அவளைத் தொடர்கிறது.

● ● ●

● மூன்றரை மணிக்கு வகுப்புகள் முடிந்த பின், என். எஸ். எஸ். என்ற பெயரில் கல்லூரித் தோட்டத்தைக் கொத்திக் களை பிடுங்கிவிட்டு, 'ஸ்பெஷல் பஸ்' பிடித்து வீட்டுக்கு வந்து சேருகிறாள் மாலா.

● ● ●

● 'டீ இன் ஒன்' மெல்லிதாக மேலை நாட்டு இசையை ஒலித்துக் கொண்டிருக்க.. அன்று மனோஜுடன் பெற்ற அனுபவங்களை ஃபோம் மெத்தையில் சாய்ந்தபடி அசை போட்டுக் கொண்டிருக்கிறாள் நீமா. மெள்ள மெள்ள அவள் கண்ணிமைகள் செருகிச் சுகமான கனவு தரும் இன்பத்தில் லயிக்கத் தொடங்குகின்றன.

● ● ●

● அந்த மாத நாவலில் 'நீமாவின் ஒரு நாள் கல்லூரி வாழ்க்கை'யைப் படித்து முடித்து விட்டுத் தலை நிமிர்கிறான் சுந்தர். அவன் கண்களில்... அம்மாவுக்குத் துணையாய் எல்லோருக்கும் பரிமாறிப் பாத்திரங்களை ஒழித்துத் தேய்த்து வைத்துப் பத்து மணிக்கு மேல் வரை உறங்கிப் போய்விட்ட அந்த நேரத்தில் 'செமினார்' பேப்பர் எழுதுவதில் தீவிரமாய் மூழ்கியிருக்கும் தங்கை மாலா தென்படுகிறாள்.

'யதார்த்த உலகில் 'நீமா'க்களை விடவும் 'மாலா'க்களே மிகுந்திருக்க.... இந்தக் கதாசிரியர்களுடைய கண்களில் மட்டும் 'மாலா'க்கள் ஏன் படுவதே இல்லை?' என்று ஒரு நிமிடம் அவன் உள்ளம் நினைத்துப் பார்க்கிறது. மறு கணமே அதற்கு அவன் இப்படிச் சமாதானமும் சொல்லிக் கொள்கிறான்: 'நடப்புக்கும் கற்பனைக்கும் உள்ள இடைவெளியை எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதிகமாகக் காட்டிக் கனவு மயக்கத்தில் வாசகர்களை மிதக்க வைத்துப் போதை ஏற்றுவதற்கு ஒரு நீமா உதவுவது போல ஒரு மாலாவால் உதவமுடியுமா?'

# College Campus



தொகுப்பு: நாயகன்

## பெண்கள் கிறிஸ்துவக் கல்லூரி

## இதயத் தாபம்

மங்கிய வெளிச்சம்
மஞ்சமோ அஞ்சசம்
மல்லிகைத் தோரணங்கள்
மாங்கனித் தேன்துளிகள்
உணர்வினில் கலந்த நான்
உறவுக்குக் காத்திருந்தேன்.
''பனிரோஜா என்னவள்
பளிங்குச் சிலையவள்
கொஞ்சும் மொழிகளால்
குங்குமப் பூவாவாள்
நாணத்தை அவளணைக்க
நானவளை அணைக்க....''
நினைவிதழ் புரட்டிக்கொண்டு
நீள்கதவு பார்த்திருந்தேன்
நித்திரைக் கன்னியின்
முத்திரை — எச்சில்!
அரக்கன் கர்வமகன்
ஆட்டுவிக்கும் அடிமையாய்
இந்தச் சித்திரவதை
என்றன் சித்திரத்திற்காக.
மோட்சக் கதவும் திறந்தது
மொட்டும் தவழ்ந்து வந்தது
மெல்ல அவளைத் தொட்டேன்
மேகச் சேலை நழுவவிட்டேன்
இன்பம் நுகரும் வேளை
இடையினில்... ஒரு தடை
திகைத்தேன், திரும்பினேன்.
வெளிர்நீலப் பட்டுடுத்தி
விழி மீன்சுழற்றி
வெட்கமிலா ஒருத்தி
வேடிக்கை பார்த்திருக்க
...ஏற்பட்ட அவசரம்
என்றன் தவறல்



முதல்வர்
டாக்டர் திருமதி
ரேணுகா முகர்ஜி
சோமசேகர்

திறந்த கதவு
திகழும் வெளிச்சம்...
வெளிறிய முகத்தினளும்
வெளிதனை நான் நோக்கச்
சிட்டெனப் பறந்தனள்
சிந்தை கவர்ந்தவள்
காத்திருந்தேன் காத்திருந்தேன்
காரிருளும் கரையக் கண்டேன்
போனவள் போனவளே
போய் யார் சொல்லுவரோ?
பகலில் நெருங்க வழியில்லை
பாழும் மனம் துடிக்குதம்மா
கொண்டவனைத் தவிக்கவிட்டு
குதித்தாடும் விண்மீனே!
கதறிநீ அழுதிடினும்
காணும் மணவின்பம்
உளமுடைந்து நீயும்
உலகக் கூரையில் சிதறிடுவாய்
நிதிபல சேர்த்தநான்
மதிமுகம் காணேனில்லை
மணமகன் கதிரவன்தான்
மழைக் கண்ணீர் வடிக்கின்றேன்.

க. விஜயா,
அறிவியல் இறுதியாண்டு, வேதியல்





# மறக்க முடியாதது

இளங்கோவடிகளின் தலைசிறந்த காப்பியமான சிலப்பதிகாரத்தை. சிலப்பதிகாரச் செய்யுள்களைக் கொண்டே நாட்டிய நாடகமாக நாங்கள் மாணவிகளாக நடித்து அவ்வருடம் அக்டோபர் 1, 2, 3 தேதிகளில் எங்கள் கல்லூரியில் அரங்கேற்றினோம். நான் கண்ணகி பாகம் ஏற்று நடித்தேன். அனைத்து மாணவிகள் ஆசிரியைகளின் கடின உழைப்பால் சிறப்பாக அமைந்த இந்நாடகத்தில் கண்ணகியின் கற்புமேம்பாட்டையும் அவளது பதி பக்தியையும் சித்திரித்தபோது என்னுள் பிறந்த பரவச உணர்வு சொல்லில் அடங்காதது. இதனை என் வாழ்நாள் முழுவதும் மறக்கவே முடியாது.

இ. ந. காவேரி,

இளமறிவியல்-விலங்கியல் மூன்றும் ஆண்டு

# 'நினைத்தாலே இனிக்கும்'

''நாளை நமதே'' என்று எண்ணி, ''மாணவன்'' ஆகிய நான், ''பதினாறு வயதினிலே'' பள்ளியை விடுத்துக் கிராமத்தினின்றும் ''பட்டினப் பிரவேசம்'' செய்து, ''மலர்கின்ற பருவத்திலே'' கல்லூரியில் நுழைந்து, ''பட்டாக் கத்தி பைரவனை''யும், ''முரட்டுக் காளை''யையும், ''நிழல்களை''யும் ஆளுயரப் போஸ்டர்களில் பார்த்துக் கொண்டே ஃபுட் போர்டில் பயணம் செய்யும் இன்பத்தை நுகர்ந்தேன். ''இளமைக் கோலம்'' பூண்டு, ''ஒருதலை ராக''மாய் பல ''ஸ்ரீதேவி''களையும், ''பிரியா''க்களையும் உளமார நேசித்தேன். ஆயினும், அக்கம் பக்கத்து பைங்கிளியையும், 'அன்னக் கிளி'யையும் 'சிட்டுக் குருவி'யையும் 'சைட்' அடிக்க என் ''நெஞ்சம் மறப்பதில்லை''. இங்ஙனம், ''நேற்று – இன்று – நாளை'' என்று மூன்றாண்டுகள் உருண்டோடி விட்டன. பல ''இல்லு முல்லு'' கற்றும் முயன்றும் அறுதிங்கள் தேர்வு முறையில் எப்படியோ இளைநிலை தேறினேன். கல்லூரி நாட்கள் என் வாழ்வெனும் 'சந்தன மலர்'களினின்றும் ''உதிரிப் பூக்களாய்'' உதிர்ந்து விழ, என் அனுபவம் ''அழியாத கோலங்களாய்'' நெஞ்சில் நிலைத்துவிடப் ''படித்தால் மட்டும் போதுமா?'' என்று எண்ணிக் கொண்டே ''படிக்காத மேதை''யாய் ''கிழக்கே போகும் ரயிலில்'' பயணமானேன்.

இரா. ஜெயந்தி

இளமறிவியல் - தாவரவியல் இரண்டாம் ஆண்டு

# ஹம்சா அய்யர்

கல்லூரி மாணவியர் தலைவி — ஹம்சா அய்யர்

( இளமறிவியல் — மனையியல் — மூன்றுமாண்டு )

தன் வகுப்பிலேயே பாடத்தில் முதலாவது மாணவி - தன் பொறுப்புக்களைப் புன்முறுவலுடன் ஏற்று நடத்துபவள் - கல்லூரித் தமிழ் நாடகங்களில் தலைமைப் பாத்திரமாகத் திறம்பட நடித்துப் பேர் பெற்றவள்.

Indian Vegetarian Congress நடத்திய கட்டுரைப் போட்டியில் 'சைவ உணவு' (Vegetarianism) பற்றிய கட்டுரை எழுதி தமிழ் நாட்டு கல்லூரி மாணவர்களிடையே இரண்டாம் இடம் பெற்றவள்.



படம் வரைந்தவர்: ஜெஸிந்த் - வின்செண்ட்

இளமறிவியல் - மனையியல் 2ம் ஆண்டு

உங்களுடைய அடுத்த திரைப்படத்தில் புதுமையாக என்ன செய்திருக்கிறீர்கள் என்று கேட்டபோது:

# தூரத்து இடி முழக்கம்





இயக்குனர் விஜயன்: குடவர் வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண் மீனவர் வகுப்பைச் சேர்ந்த ஓர் ஆண்மகனைக் காதலிக்கிறாள். அந்தக் காதலில் இருக்கும் பிரச்னைகள்தான் கதை. புதுமை எங்கே என்கிறீர்களா? புதுமை இல்லாமலா டெல்லியில் நடக்கும் சர்வதேச திரைப்பட விழாவுக்குத் தகுதி பெற்றது?

ஸ்டுடியோப் பக்கமே போகாமல் கடலும் கடலைச் சார்ந்த பிரதேசங்களிலுமே படப்பிடிப்பை வைத்துக் கொண்டேன். கர்நாடகாவில் மங்களூருக்கு அருகில் பையனூர் என்ற ஓர் இடம். அங்கு பர்மா தேசத்துக் கப்பல் ஒன்று கரைதட்டியிருக்கிறது. அந்தக் கப்பலிலும் அதைச் சுற்றியுள்ள பிரதேசங்களிலும் படப்பிடிப்பை நடத்தினேன். படத்தின் பெரும் பகுதி கடலுக்கு அருகே நடப்பதால் இசை அமைப்பாளர் சலில் சௌத்ரியிடம், ''எனக்கு உண்மையான கடல் அலையின் ஓசை வேண்டும்'' என்று கேட்க அங்கேயே பல்வேறு இடங்களில் கடல் அலையின் ஓசையைப் பதிவு செய்து கொண்டு தேவையான இடத்தில் எல்லாம் அந்த உண்மையான கடலலையின் ஓசையையே இணைத்துள்ளோம். வழக்கமாக இசைக் கருவியின் ஒலிதான் கடலலையின் ஓசை போல் எழுப்பப் பெறும். நடிக்கும் யாருக்குமே மேக்கப் கிடையாது.









# ராம் லக்ஷ்மணன்

இயக்குனர் ஆர். தியாகராஜன்: ரஜனிகாந்த் முதன் முறையாக சிங்கம், புலி, யானைகளுடன் நடித்தது தேவர் பிலிம்ஸ் படத்தில்தான். இப்பொழுது கமலஹாசன் முதன் முறையாக யானையுடன் நடிப்பதும் எங்கள் படத்தில்தான். ஓரிரு காட்சிகளில் மட்டும் இல்லை. படம் முழுவதுமே யானையுடன் வருகிறார். கதைப்படி வீட்டில் ஒரு யானை வளர்க்கிறார்கள். யானை ஒரு குட்டி போடுகிறது. அன்றே அந்த வீட்டிலும் ஒரு குழந்தை பிறக்கிறது. குழந்தைக்குப் பெயர் ராம் என்றும் யானைக் குட்டிக்குப் பெயர் லக்ஷ்மண் என்றும் வைக்கிறார்கள். இருவரும் சகோதரர்களைப் போலப் பழகுகிறார்கள். தனக்கு ஏதாவது ஏற்பட்டால் கவலைப்பட மாட்டான். ஆனால் லக்ஷ்மண் என்ற அந்த யானைக்கு ஏதாவது துன்பம் என்றால்தன் உயிரே போனாலும் சரி தடுக்காமலிருக்க மாட்டான். திரைக் கதைக்கு இந்த உணர்ச்சிதான் ஆணிவேர். ஒவ்வொரு நிமிடமும் நீங்கள் உங்கள் இருக்கையின் விளிம்பிலேயே உட்கார்ந்திருந்து ரசிக்குமளவுக்குப் படத்தை ஸஸ்பென்ஸோடு எடுத்திருக்கிறோம்.





யானையிடம் நெருங்க முதலில் கமல் பயப்பட்டாலும் பின்னால் இனிப்பைக் கொடுத்து தாஜா செய்தே அதை வழிக்குக்கொணர்ந்து விட்டார். இந்த யானை பல சூப்பர் வேலைகளை இந்தப் படத்தில் செய்கிறது.

ஊட்டியில் படப்பிடிப்பு. ஒரு நாள் இரவு யானையைப் பார்த்த சிலர் என்னிடம் ஓடிவந்தார்கள். ''சார்! யானை நடுங்குகிறது'' என்றார்கள். எனக்குப் புரிந்தது. உடனேயே அதற்கு ஷெட் தயாரிக்கச் செய்தேன். அந்த ஷெட்டைச் சுற்றி நெருப்பை மூட்டச் சொன்னேன். இப்படியாக அதன் குளிரைப் போக்கினோம். நாளாவட்டத்தில் கமலுக்கு இந்த யானை மீது அபரிமிதமான பிரியம் வளர்ந்துவிட்டது. ''இன்னிக்கு எனக்கு யானையுடன் ஷூட்டிங் இருக்கு இல்லையா?'' என்று கேட்டுக் கொண்டேதான் வருவார்.

# ஒளி பிறந்தது

இயக்குனர் துரை: 'ஒளி பிறந்தது' வாழ்க்கையின் யதார்த்தத்தைப் பிரதிபலிக்கும் படம்தான். ஆனால் அதை நான் விவரிக்கும் முறை வேறுபட்டது. எல்லோருமே ஒரு கதாபாத்திரத்தை எடுத்துக் கொண்டால் அவனது குறை நிறைகளைச் சொல்லாமல் ஏதாவது ஒரு பக்கமாகவே சென்று கொண்டிருப்பார்கள். ஆனால் என் படத்தில் முக்கியமான கதாபாத்திரமான கார் டிரைவரை அப்படி நான் காட்டவில்லை. அவன் சாதாரணத்திலிருந்து வேறுபட்ட மனிதன். இவனது காரில் ஏறுபவர்கள் ஏறுபவர் அல்ல. ஏற்றப்படுபவர்கள். ஆம். உயிரற்ற பிணங்களைத் தான் இவன் ஏற்றுவான். இதற்காகவே இவன் ஆஸ்பத்திரியின் சாவுக் கிடங்குக்கு எதிரேதான் நின்று கொண்டிருப்பான். அப்படியே யாராவது கூப்பிட்டாலும் ''வண்டி வராது சார்'' இதுதான் பதில். அப்படியே வற்புறுத்தி ஏறி உட்கார்ந்துவிட்டால் சிறிது தூரம் சென்றவுடன் வண்டி நின்று விடும். ''அப்பவே சொன்னேனே 'வண்டி வராது' என்று. கேட்டீர்களா? நிப்பேருங்க.'' இப்படிச் சொல்லியே தன்னை அழைக்கும் பயணிகள் எல்லோரிடமிருந்தும் தப்பித்து விடுவான்: இவன் வாழ்க்கையின் எதிர்பார்ப்புகள் என்ன முன்பு நடந்தவை, இனி நடக்க இருப்பவை என்ன? இதுதான் படம். சென்னை தேனாம்பேட்டையில் உள்ள விநாயகர் தெரு; அதற்கு எதிரில் உள்ள மற்றொரு தெரு - இவைதாம் எனது படப்பிடிப்புத் தளங்கள். நான் அதிகமாக உபயோகப்படுத்தியது இந்த இரு இடங்கள் தாம். வாழ்க்கையின் யதார்த்தத்தைக் காண்பிக்கும்பொழுது செயற்கைப் பூச்சுக்கள் தேவை இல்லை அல்லவா? பேட்டி: சலன்





# சத்தியத்தின் சந்நிதியில்...

மன்னார்குடி விசுவநாதன்

துணியைப்பிழிந்து ஓட்டின் மேல் காயப் போட்டுவிட்டு, இரண்டு வாளித் தண்ணீரைத் தலையில் ஊற்றிக் கொண்டு ஈரத் துண்டோடு விநாயகர், முருகன் படங்களின் முன் நின்று தியானம் செய்த பின், ''சரோஜா... சாப்பாடு ரெடியா...?'' என்று கேட்டவாறே வேட்டி சட்டை அணிந்துகொண்டு அடுக்களைப் பக்கம் எட்டிப் பார்த்தார் ராமச்சந்திர ஐயர்.

சரோஜா இரண்டாவது தாரம். கொஞ்சம் அழகு அதிகம். அதற்கு ஏற்ப ஆணவமும் கொஞ்சம் உண்டு.

சரோஜாவின் மகள்தான் மாலா. உயர்நிலைப் பள்ளி வகுப்பு முடித்துவிட்டு, பூமிக்குப் பாரமாக, அம்மாவுக்குத் துணையாக அந்த வீட்டில் பெருமூச்சு விட்டுக் கொண்டே காலத்தைக் கழிக்கிறாள், பாவம்! அவளுக்கும் வயது இருபத்தெட்டு ஆகிவிட்டது. வரன் எதுவும் வந்தால் அல்லவோ குதிர்வதற்கு!

''உங்க ஈரக் கோட்டு காய்வதற்குள்ளே சாப்பாடு ரெடியாயிடும். சும்மா பதறாமே காரியத்தைப் பாருங்கோ'' என்று பதில் சொன்ன சரோஜா வாசல் பக்கம் சென்று, அங்கே விளையாடிக் கொண்டிருந்த சிறுவன் ஒருவனிடம், ''ஏண்டா அம்பி...எங்கமாலாவைப் பார்த்தியா....'' என்று கேட்டாள்.

அவனுக்குப் பதினாறு வயசு.

கொஞ்சம் விவரம் புரிந்து வரும் நிலை.

'பட்'டென்று உடைத்துச் சொல்லிவிட்டான்: ''நம்ம மாலா அக்காவும் அந்த ஆஸ்பத்திரி டாக்டரும் அதோ அந்த பார்க்குக்குப் பக்கத்திலே ரொம்ப நேரமா நின்னு பேசிண்டேஇருக்கா....''

யாரோ கூடை நெருப்பை அள்ளித் தலையில் கொட்டியதைப் போலத் துடித்துப் போனாள் ஒரு கணம்.

சரோஜா போட்ட சாப்பாட்டைச்சாப்பிட்டு முடித்த ஐயர், ஓட்டின் கூட்டில் முக்கால்வாசி காய்ந்துவிட்ட கறுப்புக் கோட்டை எடுத்து அணிந்து கொண்டு கேஸ் கட்டுக்களைக் கையில் எடுத்தவாறு வெளியே ஓடினார். இனிமேல் பஸ் பிடித்துக் கோர்ட்டுக்குப் போக வேண்டும்.

கோர்ட்.

தன்னுடைய அறையில் நுழைந்து மேசையைத் துடைத்து, நாற்காலியைத் துடைத்து, டைப்ரைட்டிங் யந்திரத்தைத் தொட்டுக் கும்பிட்ட பிறகு இரண்டு மூன்று சீனியர் வக்கீல்கள் மேசை மேல் ரெடியாக வைத்து விட்டுப் போயிருந்த ஸ்டேட் மெண்டுகளைப் படபடவென்று டைப் யந்திரத்தில் அடிக்கத் தொடங்கினார்.

எழுபது வயதில் இத்தனை ஸ்பீடாக இவரால் எப்படி அடிக்க முடிகிறது என்று மற்ற டைப்பிஸ்டுகளும் சரி, குமாஸ்தாக்களும் சரி ஆச்சரியப்படுவதுண்டு.

தனியாக எந்த ஒரு வக்கீலிடமும் நிரந்தரமாகப் பணியாற்றுவது இவருக்கு ஒத்து வராமையினால் கொஞ்ச காலமாகவே டைப் அடித்துக் கொடுப்பதோடு நிறுத்திக்கொண்டார்.

மாலை மணி ஆறு.

''முருகா... விநாயகப் பெருமானே...'' என்று முணு முணுத்தவாறே கேஸ் கட்டுகளை எடுத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்தார் ஐயர்.

அன்றைய வருமானத்தைக் கையில் எடுத்து எண்ணிப் பார்த்தார். பதினாறு ரூபாய் இருந்தது.

''சரோஜா... இந்தா... இன்றைய வருமானம்...'' என்று சொல்லி, வழக்கம் போலப் பணத்தைக் கொண்டு போய் சரோஜாவின் கையில் கொடுத்தார்.

''நீங்க வருமானத்தைக் கொண்டு வந்து நித்தமும் என் கையிலே கொடுத்திட்டா உங்க கடமை முடிஞ்சு போயிடறதா நெனைச்சுக்கறேள். குடும்ப மானம் வீணா போயிடக் கூடாதேன்னு நான் கவலைப்படறேன். நம்ம பொண்ணு மாலா செய்த காரியம் தெரியுமோ? தினமும் உடம்பைக் காண்பிக்க ஆஸ்பத்திரிக்குப் போறேன்னு சொல்லிட்டுப் போயி... அந்த ஆஸ்பத்திரி டாக்டர் யாரோ சங்கராமே... அந்த ஆளோட நெருக்கமாப் பழகறாளாம். இது எத்தனை நாளா நடக்குதுன்னு புரியலே.''

''என்ன சரோஜா இது... நீ துணிச்சல் காரியாச்சே.... உடனே நேரிலே போயி ரெண்டிலே ஒன்னு கேட்டுடுவியே..'' என்றார் ஐயர். அவர் சாமர்த்தியமாகத் தன்



மனத்தின் பதைப்பை மறைக்க முயன்று கொண்டிருந்தார்.

''நான் போனேன். கேட்டேன். அந்த மனிதரைப் பார்த்தால் நல்லவராகத்தான் தெரியறார். வெளியூராம். பணக்காரக் குடும்பமாம். இவரு மனப்பூர்வமா நம்ப மாலாவை விரும்பறாராம். ஆனா, அவரோட அப்பா ஒரு மாதிரியானவராம். ஆகையினாலே, நீங்க விரும்பினா திருத்தணி முருகன் சந்நிதானத்திலே, முறைப்படி, சட்டப்படி உங்க பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கத் தயார்னு சொல்லிட்டார்....''

''சரிடி சரோஜா... பகவான் அருள் அப்படி யிருந்தா நாம என்ன பண்ண முடியும்? ஆனா மாலாவுக்கும் வயசு இருபத்தெட்டு ஆறது. அதுவும் டாக்டராக வேலை பார்க்கிறவன் கல்யாணம் செய்துக்க ஒத்துண்டது பெரிய காரியம். அவா அப்பா அம்மா கடைசி நேரத்திலே வந்து ஏதாச்சும் கலாட்டாப் பண்ணினா என்ன பண்றதுன்னு தான் யோசிக்கிறேன்....''

''நீங்கதான் வக்கீல் குமாஸ்தாவாச்சே! உங்களுக்குத் தெரியாத வக்கிலா, ஜட்ஜா..''

திருத்தணி முருகன் சந்நிதானம்.

டாக்டர் சங்கரும் அவருக்குத் துணையாக நாலைந்து நண்பர்கள் மட்டும்; அதே போல ராமச்சந்திர ஐயர், அவர் மனைவி— அவர்களுக்கு நெருக்கமான நண்பர்கள் சிலர் மட்டுமே வந்திருந்தனர்.

மாலாவின் கழுத்தில் தாலி ஏறியதும் ராமச்சந்திர ஐயருக்கு நெஞ்சு வலிப்பது போல் இருந்தது. ஒரு பக்கமாகப் போய் உட்கார்ந்து கொண்டார்.

திடுதிப்பென்று ஐந்தாறு பேர்கள் அங்கே வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் மாப்பிள்ளைக் கோலத்திலிருந்த டாக்டர் சங்கர் திணறிப் போனார்.

''ஏண்டா... நீயெல்லாம் ஒரு பிள்ளையா? உன்னைப் படிக்க வைச்சு டாக்டராக்கினா இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஒரு அன்னக்காவடியின் பெண்ணைத் திருமணம் பண்ணிக்கிறியே...அம்பாசிடர் காரோட ஐம்பது நூறு பவுன் நகை போட்டுத் தன் பெண்ணைத் தர்றேன்னு சொல்லிண்டு க்யூவிலே நிக்கிறாங்கள்.. ஏண்டா உன் தலை எழுத்து இப்படிப் போகணும்...''



''அப்பா நான் சொல்றதைக் கேளுங்க.'' — மாப்பிள்ளை சங்கர் பேசத் தொடங்கினர்.

''டேய் பேசாதேடா. ஒரே பிள்ளைன்னு செல்லம் கொடுத்து வளர்த்தேனே அதுக்குப் பரிசாடா இது... டேய் கடைசியா சொல்றேண்டா... என்னுடை லட்சக்கணக்கான சொத்துகள் உனக்கு வேணும்னு... நீயும் உன் புது மனைவியும் இந்த நிமிஷமே பிரிஞ்சுடணும். அவர் ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்த அப்புறம் தான் அவளோட நீ சேர்ந்து வாழனும்''

''அப்பா!''

''சொத்தும் நான் சுயமாச் சம்பாதிச்சது. நாளைக்கே கோயில் குளத்துக்கு எழுதி வச்சுட்டு, உன் அம்மாவை அழைச்சுண்டு காசியோ, ராமேஸ்வரமோன்னு புறப்பட்டுப் போயிடுவேன். என்ன சொல்றே.... சொல்லுடா'' — மாப்பிள்ளையின் அப்பா ஓரேயடியாகப் படபடத்தார்.

''சம்பந்தி.... அப்படிக் கூப்பிடறதுக்காக என்னை மன்னிச்சுடுங்கோ. நான் வார்த்தை பிசகாதவன். அதையாவது நம்புங்கோ. பெண்ணையும் மாப்பிள்ளையையும் பிரிச்சுடாதீங்க. இன்னும் மூணு மாசத்திலே தீபாவளி வரது. அதுக்கு முன்னுடி நீங்க சொன்னபடி மாப்பிள்ளைக்கு ஸ்கூட்டர் வாங்கிக் குடுத்திடறேன்... இல்லேன்னு நீங்க சொன்னபடி எட்டாயிரம் ரூபாய் ரொக்கத்தை உங்க கையிலே கொடுத்திடறேன்.... என்னை நம்புங்க. சத்தியம்.''

ராமச்சந்திர ஐயரின் கண்களில் கண்ணீர் சுரந்தது.

**கோர்ட்.**

தீபாவளிக்கு முதல் நாள். மணி நான்கு. சீனியர் வக்கீல் ராகவாச்சாரி சிரித்த முகத்தோடு வந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனர்.

அவர் வந்து போன பிறகு, ஐயரின் முகத்தில் மலர்ச்சியும் தெம்பும் பரவியது. இருந்தாலும் உடம்பின் அசதி இன்னும் கொஞ்சம் நேரம்தான் நாற்காலியிலேயே உட்கார்ந்துவிட்டுப் போவோமே என்று தூண்டியது.

மணி ஐந்து.

''என்ன ஓய்... சத்தியத்தின் உருவமே... இன்னிக்கு ராத்திரி தீபாவளி. பொழுது விடிந்தால் தீபாவளி போயிடும். நீர் சொன்னபடி உமது வாக்கை நிறைவேற்றவில்லையே...இதோ உமது பொண்ணு மாலா. விட்டுக்கு அழைச்சுண்டு போனேன். உம்ம பத்தினி நேக்கு ஒண்ணும் தெரியாது கோர்ட்டிலே அவர் இருப்பார். அவர் கிட்டயே கொண்டு போயி பொண்ணை ஒப்படைச்சுட்டுப் போங்கோன்னு சொல்ரு. அழைச்சுண்டு வந்துட்டேன். விரலுக்குத் தகுந்த வீக்கம் வேணுய்யா... எல்லாரும் எல்லாத்துக்கும் ஆசைப்படக் கூடாது.''

—ஆத்திரம் தீரப் பேசி முடித்தார் சம்பந்தி.

பக்கத்தில் கண்ணீர் விட்டு அழுதவாறு மாலா நின்று கொண்டிருந்தாள்.

ஐயரின் மனத்துக்குள்ளேதான் மவுன யுத்தம் நடந்து கொண்டிருக்கிறதே....

வாய் திறந்து அவர் பேசவே இல்லை.

''என்னய்யா... திடீர்னு ஊமையாகப் போய்விட்டீரா? ஓகோ... நீர் சத்தியவந்தன்; சொன்ன சொல்லைக் காப்பாற்ற முடியவில்லை என்று வாய் திறந்து சொல்வதற்குப் பயந்து ஊமையாப் போயிட்டீரோ?... உம்ம நாக்கை அறுத்துக்கொண்டீரோ ஓய்....''

ஐயரைப் பிடித்து உலுக்கினர் சம்பந்தி.

தலை தொங்கியது.

கைகள் செயலிழந்து தொங்கின.

''ஐயையோ... அப்பா....'' என்று அலறினுள் மாலா.

ஐயரின் கறுப்புக் கோட்டுப் பையிலிருந்து கவர் ஒன்று கீழே விழுந்தது.

திக்பிரமை பிடித்தவராக அந்தக் கவரை கையில் எடுத்துப் பார்த்தார் சம்பந்தி.

கனத்த அந்தக் கவரின் மேலே 'ரெஞ்சிவி மாப்பிள்ளை அவர்களுக்குச் சேர வேண்டியது' என்று மட்டும் எழுதப்பட்டிருந்தது.

உள்ளே—

வெறும் நூறு ரூபாய் நோட்டுக்களாக எண்ணாயிரம் ரூபாய் இருந்தது.

ராமச்சந்திர ஐயரின் பரிதாப நிலையை சீனியர் வக்கீல் ராகவாச்சாரி, கோர்ட்டில் உள்ள எல்லா வக்கீல்கள், ஊழியர்களிடமும் சொல்லி, கடந்த ஒரு மாத காலமாகச் சேர்த்த பணம்தான் அது என்கிற விவரம் பாவம், பணத்தாசை பிடித்த சம்பந்திக்கு எப்படித் தெரியும்?

கைகளில் பணத்தோடு நின்றிருந்த சம்பந்தியின் முன் சத்தியத்தைச் செயல்படுத்தி விட்ட மன நிறைவோடு மேலுலகம் போய் விட்ட ராமச்சந்திர ஐயர் அமைதியுடன் காட்சியளித்துக் கொண்டிருந்தார்.

சத்தியத்தின் சந்நிதியில் குலை நடுக்கத்தோடு மங்கி வரும் கண் பார்வையோடு கண்களிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைக்கவும் செயலிழந்து தலை குனிந்து நின்றிருந்தார் சம்பந்தி.

---

''இட்லி தின்கிற போட்டியில் எனக்குத் தங்கப் பதக்கம் கிடைச்சுது''

''எங்கே அது?''

''அதை வித்து இட்லி வாங்கித் தின்னுட்டேன்!''






## கேள்வி பதில்கள்

⌘ விஜயராகவன், புவனகிரி

கே. ரஜனிக்கு சூப்பர் ஸ்டார் என்ற டைட்டில் தரு கிறார்களே, இதற்கு அவர் தகுதி உடையவர் தானா?

ப: தகுதி உடையவர்தான். ஆனால் "எல்லாம் உன் கைராசி" போன்ற படங்களில் தொடர்ந்து நடித்துக் கொண்டிருந்தால் பட்டம் பறந்து போய்விட வாய்ப்பு உள்ளது. சூபர் ஸ்டாராக ஆவது சுலபம்; அதை நிறுத்தி வைத்துக் கொள்வதுதான் சிரமம்.

⌘ மா. மோகன், பவானிசாகர்

கே. தமிழக முதல்வர் ஏன் லட்சம் லட்சமாகப் பணம் தரும் திரை உலகை விட்டு, தலைவலி திருகுவலி பிடித்த முதலமைச்சர் பொறுப்பை ஏற்றார்?

ப: எதற்கு ஏற்றார் என்பதை விட, என்ன காரணத்துக்காக நிச்சயம் ஏற்கவில்லை என்று கூற முடியும். அரசியல் பதவியின் மூலம் பணம் பண்ணுவதற்காக இதில் இறங்கவில்லை என்பது தெளிவு.

⌘ சங்கர், சென்னை-44

கே. எனது பெயர் பிரபலம் ஆக நான் என்ன செய்ய வேண்டும்?

ப; ஏற்கனவே பிரபலமாகிவிட்ட பெயர் தானே! கார்ட்டூனிஸ்ட் சங்கர், டைரக்டர் சங்கர், ஒருதலை ராகம் சங்கர், இசை அமைப்பாளர் சங்கர் (கணேஷ்)—போதுமா சங்கரின் பிரபலத்துக்குச் சான்றுகள்!

⌘ உமா சேகர், நெல்லிகுப்பம்

கே. 'சாவி'யின் வான் கோழிந்தனத்தை ரசித்தீர்களா?

ப: அது வான்கோழி அல்ல. அசல் மயில். ரொம்ப ரசித்தேன்.

⌘ மாலினிராஜா, சென்னை-17

கே. 'மற்றவை நேரில்' படம் மூலமாக மௌலிக்கு ஒரு ஸ்திரமான இடம் கிடைத்து விடுமா?

ப: 'விடுமா'வா? விட்டது. மற்றவை நேரில் படத்தில் கதை, வசனம், புது முகங்கள் காமிரா வேலை யெல்லாம் ஜோர். (அதில் வந்த இரண்டு புதிய முகங்கள் விஜயனும் ஜெயதேவியும்தான் மைனஸ் பாயிண்டுகள்) மௌலியைப் படத் தயாரிப்பாளர்கள் மொய்க்க ஆரம்பிப்பார்கள். அவர் சகட்டு மேனிக்குப் படம் எடுக்க ஆரம்பித்தால் ஸ்திரமான இடம் இல்லாது போய்விடலாம்.

⌘ சிவராஜகுமார், சிதம்பரம்

கே. இந்தியாவில் அரசியல் கலப்படம் இல்லாமல் சமூகத் தொண்டு செய்து வரும் ஸ்தாபனம் எது?

ப: எத்தனையோ உள்ளன. ராமகிருஷ்ண மிஷன், செஞ்சிலுவைச் சங்கம் போன்றவை. சமீப சில வருஷங்களாக 'விஸ்வ ஹிந்து பரிஷத்' என்ற அமைப்பும் சிறப்பான சேவைகளைச் செய்து வருகிறது.

⌘ மிஸ். பி. புவன், மதுரை-2

கே. நாதஸ்வர கச்சேரிக்கு இன்றியமையாத ஜால்ராவும் ஒத்தூதலும் சமூகத்தில் கிண்டலுக்கு ஆளாவதேன்?

ப: வாழ்க்கை ஒரு நாதஸ்வரக் கச்சேரியாக இல்லாததுதான்! மேலும் ஜால்ராவும் ஒத்தும் இசைக்கு ஏற்ற தாளத்திலும் சுருதியிலும் இருந்தால்தான் கேட்க இசைவாக இருக்கும். பல ஜால்ராக்களும் ஒத்துகளும் பல சமயம் கச்சேரி முடிந்த பிறகும் தங்கள் நிகழ்ச்சியை நடத்தும் போது கிண்டல் செய்யாமல் என்ன செய்வது?




⌘ கவிமயிலன், விளாத்திகுளம்

கே. உழைப்புக்கே ஊதியம் கிட்டாமல் பலர் இருக்கும் போது, லாட்டரியில் முதல் பரிசாகப் பல லட்சங்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ப: நினைப்பதா? வயிறு எரிகிறேன்!

⌘ எஸ். எஸ். டி. ராஜன், திருவையூர்

கே. மனைவி கர்ப்பிணியாக இருக்கும்போது கணவன் தாடி வளர்க்கிறானே ஏன்?

ப: மனைவியிடம் குழந்தை வளரும்போது இவனிடம் ஒன்றும் வளராவிட்டால் நன்றாக இருக்காதே என்று தாடி வளர்க்கிறான் போலும்!

பரிசு பெறுபவர் :

சிவராஜகுமார்
36, கமலீஸ்வரன் கோயில் தெரு,
சிதம்பரம்

# வாழ்க்கையின் சிறு மகிழ்ச்சிகளுக்காக சேமிப்பது எப்படி?



உங்கள் குழந்தைகளின் முகத்தில் காணும் மகிழ்ச்சி, குடும்பத்தினருடன் உல்லாசப் பிரயாணம்—இவை போன்ற சில மகிழ்ச்சித் துளிகள் வாழ்க்கையின் சிறப்பு அம்சங்களாகும். இன்று சேமிக்கும் வசதியில் உள்ள நீங்கள் கனரா பாங்கில் **நிரந்தரா டெபாசிட்** கணக்கை உடனே தொடங்குங்கள்.

மாதந்தோறும் சேமிக்கும் சிறு தொகையானாலும், ஒரே தவணையில் செலுத்தப்படும் கணிசமான தொகையானாலும் இத் திட்டத்தில் சேமித்த தொகை நிரந்தரமான மாத வருமானத்தைப் பெற வழி செய்கிறது.

உங்கள் பாதுகாப்பான எதிர்காலத்திற்கு உறுதியளிப்பது நிரந்தரா டெபாசிட் திட்டம்.

விபரங்களுக்கு அருகில் உள்ள எமது கிளைக்கு விஜயம் செய்யுங்கள். எமது இதர சேமிப்புத் திட்டங்கள்: **காமதேனு, வித்யாநிதி, பாலக்ஷேமா** முதலியன

## நிரந்தரா டெபாசிட்

## கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.

maa CB 2 E Tam 80



# மனவாசம்

**கண்ணதாசன்**

## 3. ஓவியத்தில் சிலந்திக் கூடு

பாரீசுக்குப் போய் வந்தவர்கள் எத்தனை இரவுகள் அங்கே தங்கினீர்கள் என்று கேட்பார்களாம். வாழ்க்கை என்பதே அங்கு இரவில் தானே நடக்கிறது?

அவனும் அப்படித்தான்.

உதய சூரியனை விட அவன் அஸ்தமன சூரியனையே அதிகம் நேசித்தான்.

''சூழ்நிலைகளை மறப்பதற்காகவே குடிக்கிறேன்'' என்று பல குடிகாரர்கள் சொல்வதுண்டு. அது முற்றிலுமே பொய்யல்ல. குடியினால் வரும் சுகத்தை விட, குடிக்காமல் பெறும் சுகமே அதிகம் என்பது அவனது அனுபவத்தில் நன்றாகத் தெரிந்தது. ஆனால் குடியிலும், விலைமாதர் உறவிலும் சுகம் கிடைத்தது என்பதை விட, துன்பத்தை மறக்க முடிந்தது.

உள்ளே நுழைந்தவள் ஏற்கனவே அவனுக்கு அறிமுகமான பெண்தான். பாவப்பட்ட ஜென்மம். ஆனால் நல்ல அழகி. சின்னஞ்சிறு வயது. தாய்மொழி தெலுங்கு என்றாலும், தமிழ் நாட்டிலேயே பிறந்து வளர்ந்தவள். ஆயிரம் விளக்குப்பகுதியில் குடியிருந்தாள்.

அப்போது அவனது 'தென்றல்' அலுவலகத்துக்கு அருகே இருந்த ஒரு ஹோட்டலுக்கு அடிக்கடி கூட்டி வந்திருக்கிறான்.

அவள் அவனிடம் பணத்துக்காக மட்டும் வரவில்லை; நல்ல மதிப்பும், மரியாதையும் வைத்திருந்தாள். அவனுடனேயே வாழ வேண்டும் என்பது அவளுடைய லட்சியக் கனவு. அவளையும் அவனொரு மனைவியாக ஆக்கிக் கொண்டிருந்தால், அவனது வாழ்க்கை வேறுவிதமாகக் கூட ஆகி இருக்கக் கூடும். அவ்வளவு நம்பிக்கைக்குப் பாத்திரமானவள், அவள்.

ஒரு பெண்ணைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு எந்த மனிதனும் வேறு சிந்தனையில் ஈடுபடுவானா?

ஆனால் அவனது சுபாவம் பல நேரங்களில் அப்படித்தான். அவன் தோளில் முளைத்திருந்த முட்செடிகள், மனத்தின் சுமைகளாக அவன் கூடவே வந்தன. அழகான ஓவியத்தின் மீது கட்டிய சிலந்திக் கூடு போல், அவனது அற்புதமான சிந்தனைகளுக்குக் குறுக்கே அவை பாய்ந்து கொண்டிருந்தன.

அழகை ரசிக்கும்போதும், புத்தகம் படிக்கும்போதும், 'பகீர் பகீர்' என அந்த நினைவுகள் தாக்கியதால் பல நேரங்களில் எங்கிருக்கிறோம் என்பது தெரியாமலேயே, பைத்தியக்காரன் போல் அமர்ந்து விடுவான்.

குடி அதிகமானால் ஒன்று அழுது தீர்ப்பான்; இல்லையேல் ஆத்திரக்காரனாவான்.

இன்று பெயரைச்சொல்ல முடியாத அளவுக்குப் பணக்காரியாக இருக்கும் அவள், அவன் காலடியில் அமர்ந்து பாதங்களைத் தடவிக் கொடுத்தாள். ''என்ன ஞாபகம்? என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று கேட்டுக்கொண்டே இருந்தாள்.

இப்படியும் ஒரு சலனமா? புஷ்பத்தைக் கையிலே வைத்துக் கொண்டு மூக்கை ஜன்னலுக்கு வெளியே நீட்டுவார்களா?

அவன் எழுந்து கட்டிலில் உட்கார்ந்தான். அவளது சிந்தனையைத் திருப்ப முயன்றாள்.

அந்த மாதிரி நேரங்களில் அவன் ஒன்று செய்வது வழக்கம். அதிகமாக ஊற்றி மள மளவென்று குடித்து விடுவான்.

குட்டை கலங்கினால் தானே முகம் தெரியாது. நினைவு தடுமாறினால்தானே சில பாவிகளைப் பற்றிய நினைப்பு மறக்கப் படும்?

ஆத்திரம் வந்து நெஞ்சு கொதிக்காமலிருக்க அவன் கட்டிலில் சாய்ந்தான்.

அந்தக் கம்பெனியில் உணவுப் பொருட்கள் அற்புதமாக இருக்கும். சென்னை நகரில் எங்கேயும் அப்படிப்பட்ட உணவு கிடைக்காது. புரதச் சத்துக்கள் நிறைந்த உணவைத் தயாரித்து வைப்பார்கள். பர்மா மொச்சை, காய்கறிக் கலவை, புழலேரியில் வாங்கி வரப்பட்ட மீன், இளம் முருங்கைக்காய், பீன்ஸ் – ஏதோ மாப்பிள்ளை மார்களுக்கு ஊட்டச் சத்துக் கொடுப்பது போல் இருக்கும்,



சிஷ்யன்: "புத்தர் ஆவது கஷ்டமா குருவே...?"

குரு: "ரொம்பச் சுலபம்! போதி மரம் எது என்று கண்டு பிடிப்பதுதான் கஷ்டம்!"

- உ. ராஜாஜி

---

அவள் அதை எடுத்து ஊட்டி விட்டாள். அவன் தன்னோடு கொஞ்சிப் பேச வேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஒருவேளை தான் அழகாக இல்லையோ என்று நினைத்து, கண்ணாடியின் முன்னால் நின்று தன்னைத் திருத்திக் கொண்டாள். அவனும் தானொரு ஆண் பிள்ளை என்பதை நினைவுகூர்ந்தான்.

இரவு எந்நேரமானாலும் அவன் எங்கேயும் தங்குவதில்லை. வீட்டுக்குத் திரும்பிவிடுவான் அன்றும் அப்படியே!

காலையில் எழுந்தால் இந்தக் கவலைகள் பறந்துவிடும். கடன்காரன் கவலை ஆரம்பமாகிவிடும். காலை எட்டு மணி முதல்ஒன்பது மணிவரை வக்கீல் வீட்டில் உட்கார்ந்திருப்பான். ஆனாலும் அவனது வழக்குகள் ஒன்று கூடச் சரிவரக் கவனிக்கப்பட்டதில்லை. கையெழுத்தே இல்லாத வழக்கில்கூடப் பணம் கட்டினான் என்றால், அவனது தலையெழுத்து எவ்வளவு மோசமாக இருந்திருக்க வேண்டும்?

எல்லாவற்றையும் மறக்கடித்தது ஹார்மோனியச் சத்தம். பாட்டெழுத உட்கார்ந்துவிட்டால், எழுந்திருக்கும்வரை வேறு நினைப்பு வராது. பாட்டு முடிந்து விட்டது என்றால் ஏன் முடிந்துவிட்டது என்று தோன்றும்.

பீம்சிங் அவனிடம் வைத்திருந்த மரியாதையின் காரணமாகப் பல சிந்தனைகளையும் அவனிடமே குவித்தான். பாவ மன்னிப்பில் வரும் 'சிலர் சிரிப்பார், சிலர் அழுவார்' என்ற பல்லவி வேறொரு படத்துக்காக எழுதியது; அதை அதிலேயே தூக்கிப் போட்டான்.

1960க்கு முன்னால் நடந்த பாண்டிச்சேரி தேர்தலுக்கு அறிஞர் அண்ணாவும், அவனும் அவனது காரில் போனார்கள். எவ்வளவு தூரப் பயணம் என்றாலும், எவ்வளவு பசித்தாலும், அண்ணா ஹோட்டலில் இறங்கிச் சாப்பிட மாட்டார். எங்காவது மிக்சர் பொட்டலம் வாங்கிக்கொள்வார்.

அப்படி வாங்கிய ஒரு பொட்டலக் காகிதத்தில், 'கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா' என்றொரு பாடல் இருந்தது. அந்தப் பாடலின் எதிரொலியாகத்தான் 'அத்தான், என்னத்தான்' என்ற பாடல் எழுந்தது.

பகவான் கீதையில் சொன்னானே, 'ருதுக்களில் நானே வசந்தம்' என்று; அதை எங்கேயோ படித்த ஞாபகம். அதன் எதிரொலி தான், 'காலங்களில் அவள் வசந்தம்'.

அப்போதெல்லாம் அவன் வீட்டின் முன்னாலேயே பத்துக் கார்கள் வந்து நிற்கும். தயாரிப்பாளர்கள், தங்களுக்குள், "யார் அதிர்ஷ்டக்காரர்கள் பார்ப்போம்" என்று பேசிக்கொள்வார்கள். ஆனால் அவன் பத்துப் பேரையும் திருப்தி செய்து விடுவான்.

அவன் வாழ்க்கை இதுதான், ஒரு பக்கம் இமயமலை; மறு பக்கம் அதல, விதல, சுதல பாதாளம்.

சில நேரங்களில் அளவு கடந்த உற்சாகம்; பல நேரங்களில் தாள முடியாத ஆத்திரம்.

இந்த ஊசலாட்டத்தின்போது மராட்டியத்திலிருந்து தோழர் சம்பத் அவர்களுக்கு ஓர் அழைப்பு வந்தது. அங்கே கணிசமான பலமுள்ள ஒரு கட்சி. அதன் பெயர் கிஸான் மஸ்தூர் பிரஜா கட்சி. தங்கள் மாநாட்டுக்கு வரும்படி அழைப்பு. சம்பத் அவனைக் கேட்டார். ஆகா! தேசிய வெள்ளத்தில் நீந்தப் போகிறோமே விடலாமா!

தோழர் எம். பி. சுப்பிரமணியத்தையும் அவரோடு சேர்த்து விட்டார். அவன் டைரக்டர் தாதா மிராஸியையும் கூடக் கூட்டிக் கொண்டான்.

அவனது பிளைமவுத் காரில் பிரயாணம் தொடங்கிற்று. டிரைவர் மாணிக்கம். கூட இன்னும் இருவர்.

சென்னையிலிருந்து பெங்களூர்; பெங்களூரிலிருந்து ஹிரியூர்; அப்படியே பாமினி ராஜ்யங்கள் வழியாக உஸ்மானாபாத்.

பயணம் புறப்பட்டது நன்றாகத்தான் இருந்தது. ஆனால் அந்தப் பயணத்தினிடையேயும் துரோகிகளின் நினைவு கட்டெறித்துக் கொண்டே இருந்தது.

சின்ன வயதில் அவன் சிறுகூடல்பட்டியிலிருந்து புதுக்கோட்டைக்கு பஸ்ஸில் செல்வான். முன் சீட்டைப் பிடித்துக்கொண்டு காலை மட்கார்டில் போட்டுக் கொள்வான். காற்று உடம்பில் படப் பட சிந்தனை சிறகடித்துப் பறக்கும். இந்தப் பயணத்திலோ பறக்கும் சிந்தனையைப் பயங்கரமான சிந்தனைகள் அடித்துக் கீழே போட்டன.

எப்போதோ அமைதி இழந்துவிட்ட அந்த மனிதன், தூக்கிப் போடும் ரயிலில்தானே இத்தனை காலமும்தூங்கிக்கொண்டிருந்தான்?

அவனுக்கு ஆறுதலாக இருந்தவை தாதா மிராஸியின் நகைச்சுவைப் பேச்சும், எம்.பி. சுப்பிரமணியத்தின் நட்பும்.

வழியில் ஓரிடத்தில் பயங்கரமான நதி குறுக்கிட்டது. அது வறுமை நிறைந்த மராட்டியப் பகுதி. எழுபத்தி நான்கு மைல் சுற்றிப் போக வேண்டியிருந்தது. மாவீரன் சிவாஜி பிறந்த ஊர் வழியாகச் சுற்றிச் சென்றார்கள்.

மோமினாபாத் மாநாட்டை அடைந்தார்கள். மாநாட்டைப் பார்த்தபோது தான் இதற்கா இவ்வளவு தூரம் வந்தோம் என்று தோன்றிற்று. (வளரும்)

---

**ஒரு வேண்டுகோள்**

என் வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் யார் யாருக்கு என்னென்ன ஞாபகம் இருக்கிறதோ அவற்றைத் தயவு செய்து எனக்கு அனுப்பி வைக்கக் கோருகிறேன். கண்ணதாசன், கவிதா ஹோட்டல், ஆழ்வார்பேட்டை, சென்னை-600 018.

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர் — கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினதுல் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம்! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.

---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்றி ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளேட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது




ASP-BE-8001A

# ஓசையல்லா

கருணாமணாளன்



**வீ**டு வெறிச்சோடிக் கிடந்தது.

பர்வீன்பானு தலைப் பிரசவத்துக்காக ஆத்தூரிலிருக்கும் பிறந்தகத்துக்குப் போய் நான்கு தினங்கள் ஆகின்றன.

வீட்டைப் பெருக்குவதும் பத்துத் தேய்ப்பதுமாக இருந்து வந்த ஆயா, பர்வீன் பானு பிரசவத்துக்காகச் சென்றதிலிருந்து சமையல் வேலைகளையும் சேர்த்துப் பார்த்து வந்தாள்.

சில நொடிகளுக்கொரு தரம் என்னை வந்து பார்ப்பதும் திரும்பிப்போவதுமாக இருப்பதிலிருந்து அவள் என்னவோ பேச விரும்புகிறாள் என்று புரிந்து கொண்டவனாக, அவளாகவே வரட்டும் என்று புத்தகத்தை விரித்துப் பிடித்துக் கொண்டிருந்தேன்.

இந்த ஆயா ஸீனத்தை வேலைக்குச் சேர்ப்பதற்குப் பர்வீன் பானு பலமுறை என்னிடம் அனுமதி கோரி முடிவில் நான் சம்மதித்த போது மகிழ்ந்து போனவள் பர்வீன் பானு தான்.

"பாவம் ஸீனத்! அவள் புருஷன் சுத்த சோதாப் பயல். அவளைத் தள்ளி வைத்து விட்டான். போயும் போயும் இந்தக் கிளியை அந்தக் கடுவன் பூனையிடம் ஒப்படைத்தானே அவள் தகப்பன்!"

"எதற்காகத் தள்ளி வைத்து விட்டானும், பர்வீன்?"

"உங்களுக்குத் தெரியாதா? அது ஒரு பெரிய துயரம். ஸீனத்தின் தந்தை அஞ்சாறு புள்ளை குட்டிகளின் தகப்பன். பரம ஏழை. சீர் சிராட்டு, ரொக்கம், இக்கம் எதுவும் வேண்டாம் என்று ஸீனத்தைப் பெண் கேட்டு வந்தவர்களைப் பற்றிச் சரிவர விசாரிக்காமல் ஒப்புக்கொண்டு விட்டார். பிறகுதான் அவர்களுக்குத் தெரிய வந்தது – அவன் குடிகாரன், சூதாடி, முரடன், ஊர் வம்பை விலை கொடுக்காமல் வாங்கிக் கட்டிக் கொள்ளும் பிரகஸ்பதி என்று. தினசரி அடி உதை என்று ஸீனத்தைச் சித்ரவதை செய்ய ஆரம்பித்து விட்டான். கடைசியில் குடி வெறியில் ஒரு நாள் அவளை வீட்டுக்கு விரட்டி விட்டான். அவளும் இதிலிருந்து விடுதலை கிடைத்தால் போதும் என்ற தவிப்பில் தூத்துக்குடியில் இருந்து ஆத்தூருக்குத் திரும்பிவிட்டாள்."

வாசலில் நிழலாடியது.

ஸீனத்! மேலாடையைக் கவனமாய்ப் போர்த்தியபடி பவ்வியமாக நின்றிருந்தாள்.

"என்ன விஷயம்?" என்று கேட்பதுபோல் பார்வையால் வினவினேன். ஏழடி இடைவெளி இருக்கும் எனக்கும் அவளுக்கும்.

"நீங்க... கதைகளெல்லாம் எழுதறதாக அக்கா அடிக்கடி சொல்லுவாங்க..."

"அதற்கு என்ன இப்போ?"

"மத்தவங்களை விட உங்க மாதிரி உள்ளவங்களுக்கு மற்றவர்களுடைய மனநிலை நல்லாத் தெரியும்... இல்லே?"

"சுற்றி வளைக்காமல் விஷயத்தைச் சொல், ஸீனத்!"

"என்னை அவரு வீட்டுக்குப் போகச் சொல்லி இன்னிக்கோடு ஒன்பது மாதமாகிறது. எனக்குக் கல்யாணம் ஆகாமல் இருந்திருந்தால் இந்த ஒன்பது மாதம் என்ன ஒன்பது வருஷம் கூட இருந்து விடுவேன். இனிப்பு மிட்டாயைக் குழந்தை ருசிக்காத வரை அதைத் தீண்டாது.. சுவையைக் கண்டு விட்டால்... இனிப்பு மிட்டாயை அது தேடும். ... புரிந்து இருப்பீங்கன்னு நினைக்கிறேன்...' அதனால்...."

"அதனால்?"

"அவரை நீங்க எப்படியாவது ஒரு நடை தூத்துக்குடிக்குச் சென்று சந்தித்துப் பக்குவமாகப் பேசி மனத்தை மாற்றி என்னை வந்து அழைத்துப் போகச் சொன்னால்.."

"விலாசம் இருக்கா? அவர் என்ன பண்றார்? வயசு எந்தனை இருக்கும்?"

"ரஹமத்துல்லா புரத்திலே பழைய இரும்பு வியாபாரம். உங்க வயசுதான் இருக்கும்!"

"இன்ஷா அல்லாஹ். நிச்சயமாக நான் முயற்சி செய்கிறேன். கவலைப்படாதே ஸீனத்! செலவுக்கு ஏதும் வேணுமா?"

"வேண்டாங்க.... அக்கா தந்துட்டுப் போயிருக்காங்க!"

நன்றாய் உடுத்தி, தலைவாரி இருந்தால் ஸீனத் பர்வீனை விட ஒரு பேரழகி என்றே சொல்லலாம். பாவம், அவளுடைய தலைவிதி இப்படி ... ஒரு நிலவில்லாத வானம் போல இருக்கிறாள்.

எத்துணை கஷ்டம் இருந்தால், இப்படி மனம் விட்டுச் சொல்லுவாள்...!

என்னதான் வயிறு நிறைய உணவும், உடுத்துவதற்கு ஆடையும், தங்குவதற்கு இடமும், அன்பு பாராட்டப் பெற்றோரும் மற்றோரும் இருந்துவிட்ட போதிலும் ஒரு பெண்ணுக்குக் கணவனின் நியமமான கடமையும் துணையும் கிடைத்த மாதிரி ஆகிவிடுமா?

பார்வீன் அவனிடமிருந்து விடுதலை கிடைத்தால் போதும் என்ற தவிப்பில் ஸீனத் வந்து விட்டதாகச் சொன்னுளே... பிரசவ வைராக்கியம்தான் போலும்!

ஆபீஸில் ஒரு நாள் லீவு பெற்றுக்கொண்டு தூத்துக்குடிக்குக் கிளம்பும்போது மணி பத்தாகி விட்டது.

அவர் முரட்டுத்தனமாகத் தான் பேசுவார்... நீங்கள் கொஞ்சம் பக்குவமாக நடந்து கொள்ளுங்கள்!'' வழியனுப்பி வைத்த ஸீனத் கூறி வைத்தாள்.

தூத்துக்குடியிலிருந்து திரும்பும்போது இரவு ஒரு மணி. போகும்போது இருந்த உற்சாகமும் நம்பிக்கையும் போன இடம் தெரியவில்லை — திரும்பி வந்தபோது!

''என்னங்க அவர் இருந்தாரா? கண்டு பேசினீங்களா? என்ன சொன்னுர்? வருவாராமா?'' ஆவலாய் ஸீனத் கேள்விகளை எழுப்பினுள்.

அவளுக்கு எப்படிப் பதில் சொல்வது?

சே! மனிதனுகவா நடந்து கொண்டான்?

''போயிருந்தேன் ஸீனத்! ஆனுல், உன் புருஷன் வெளியூர்சென்றுவிட்டாரும். சாயங்காலம் நாலு மணிக்கெல்லாம் வருவதாகச் சொன்னுர்கள். ஆனுல் வரவில்லை. இன்னெரு முறை முயற்சி பண்றேன்!'' முழுப் பொய்யை அவள் நம்பும்படி சொல்லி வைத்தேன்.

இரவுச் சாப்பாட்டைப் பரிமாறிவிட்டு, ஸீனத் போய்விட்டாள்.

மறுபடியும் தூத்துக்குடியில் நடந்த நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்க்கிறேன்.

''நீதான் அந்தக் கதை எழுதற ஆசாமியா?'' என்னை அறிமுகம் செய்த பிறகு அவன் கேட்ட முதல் கேள்வி.

''ஆமா பிரதர்!''

''அடி சக்கைன்னுனும்! முறையா உறவு சொல்றியே! பொண்டாட்டி புள்ளை பெறப் போயிருக்கிறுள். அதுவரை உனக்கு இன்னெருத்தன் பொண்டாட்டி கிடைத்திருக்கிறுள். அப்படித்தானே! எல்லாம் நான் கேள்விப்பட்டுத்தான் இருக்கேன்.''

''நீயும் ஒரு மனுஷனு?''



விமானத்தை விட்டு இறங்கியதும் நாங்கள் பார்த்த காஷ்மீர்ப் பெண்களெல்லாம் நிறைமாதக் கர்ப்பிணிகளாகத் தோன்றினார்கள். பிறகு பார்த்த ஆண்களுக்கும் வயிறு பெரிதாக இருந்தது. எங்களுக்குக் கவலையாகப் போயிற்று. அருகில் இருந்த காஷ்மீர்க் காரரை விசாரித்தபோது தான் விஷயம் விளங்கியது. பிரம்பினால் பின்னப்பட்ட சிறு கூடைக்குள் மண் சட்டியை வைத்து, அதற்குள் கனலை நிரப்பி அப்படியே அதை வயிற்றோடு சேர்த்துக்கட்டிக் கொண்டு மேலே சட்டை, கம்பளி முதலியவற்றைப் போர்த்திக் கொண்டு விடுகின்றனர். காஷ்மீரின் குளிரைத் தாங்கிக் கொள்வதற்காக! (வி. எஸ். சிதம்பரம் எழுதிய புண்ணிய பூமியில் புனித யாத்திரை என்ற நூலிலிருந்து) -பி. எஸ். எஸ்.
பிரசுரம்: வானதி, சென்னை-17 விலை ரூ. 5/-



''மனுஷனாய் இருக்கப் போய்த்தான் என் வாய் பேசுது. இல்லேன்னா இது பேசும்!''— கூறிக்கொண்டே இரும்புத் தடி ஒன்றை எடுத்துக்கொண்டு, ''நான் மீண்டுமா மாறத்துக்குள்ளே இந்த இடத்தைக் காலி பண்ணிடு!'' என்றான்.

இப்படிப்பட்ட குணக் கேடனை . இந்த ஸீனத் இன்னும் நம்பிக் கொண்டிருக்கிறாளே!

உன் புருஷன் இப்படிக் கேட்டுவிட்டான் என்று ஸீனத்திடம் சொன்னால்... அந்த நிமிஷமே உயிரை மாய்த்துக் கொள்ளும் உத்தமியாயிற்றே!

அவளுடைய வாழ்வில் இப்படி ஒரு சோதனையா?

''ஸீனத் ஆபீஸ் வேலையாக இரண்டு மாதங்கள்வரை நான் டில்லியில் இருந்தாக வேண்டும். பர்வீனுக்கும் தபால் போட்டிருக்கிறேன். நான் வரும்வரை நீயும் உன் பெற்றோரும் நம் வீட்டிலேயே இருந்துகொள்ளுங்கள். அதுவரை செலவுக்குப் பணமும் தருகிறேன்.''

''நல்லதுங்க!'' என்று பொறுப்புணர்வோடு கூறினாள் ஸீனத்.

---

''தொடடால் போதும், உடனே டர்ரென்று கிழிகிற புடவை கேட்கிறீங்களே! யாருக்கு? உங்க மாமியாருக்கா? நாத்தனாருக்கா?''

''இல்லே எங்க சினிமா கம்பெனிக்குத்தான். அடுத்த செட்லே கதாநாயகி கற்பழிக்கப்படுகிற ஸீன்லே நடிக்கவேண்டியிருக்கு!''



டில்லியிலிருந்து திரும்பியதும் ஸீனத்தின் கோலம் என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

வெள்ளை துகில் — வெற்றுக் கழுத்து — விதவைக் கோலம்!

என் பார்வையைப் புரிந்து கொண்ட ஸீனத்தின் தந்தை முனாஜிக் சொன்னார். ''தூத்துக்குடிக்காரன் என் பெண்ணை விவாகரத்து செய்துட்டான்! நம்ம வீட்டிலேயே ஸீனத் இத்தா இருந்து அந்த ஷரத்தை முடித்துவிட்டாள்.''

முனாஜிக்கின் தகவல் எனக்குச் சற்றுக் கவலையைத் தந்தாலும், பல வகையில் அது பெருத்த நிம்மதியாக இருந்தது.

டில்லியில் இருக்கும்போது பர்வீன் பானு தபால் போட்டிருந்தாள். 'இன்னும் சில தினங்களில் நீங்கள் தந்தையாகப் போகிறீர்கள். நிச்சயமாக ஆண் குழந்தையாகத்தான் இருக்கும். வயிற்றுக்குள் இருக்கும்போதே அவன் துடிக்கிற துடிப்பு....அப்பப்பா!' இன்னும் நிறைய எழுதியிருந்தாள் — டிஸ்பென்ஸரியிலிருந்து.

இந்த இனிய நினைவுகளெல்லாம், ஸீனத்தின் தோற்றத்தைக் கண்டதும் கரைந்தது.

வழக்கம்போல விடிந்தது.

தந்திச் சேவகன் கதவைத் தட்டினான்.

''ஸார் தந்தி!''

பர்வீன் இப்போது தாயாகிவிட்டாள்! நாம்கூட ஒரு தந்தையாகி விட்டோம்! பிறந்திருப்பது ஆணா பெண்ணா?

அடக்க முடியாத ஆவலுடன் பிரித்த போது....

இடியின் தாக்குதலையும், மின்சாரப் பாய்ச்சலையும் மீறி ஒருவகை அதிர்ச்சி வசப்பட்டுத் தள்ளாடியபோது என் கண்டத்திலிருந்து, என்னையும் அறியாமல் பிறிட்டது. ''பர்வீன்! ஓ பர்வீன்... பர்வீன்!''

அலறல் கேட்டு ஓடிவந்தனர் அக்கம் பக்கத்தவர்.

முதல் பிரசவத்திலேயே பர்வீன் அமரத்வம் எய்திவிட்டாள்!

அந்திமக் கடன்களை முடிப்பதற்காக விருதுநகர் சென்றேன்.

நாற்பது வயதிலிருந்து வளர்க்க எண்ணியிருந்த தாடியை இருபத்தேழிலேயே வளர்த்தேன். அப்படி ஒரு விரக்தி!

என்னுடைய விரக்தி நிலையை இயன்ற மட்டும் ஸீனத் கலைப்பதற்கு முயன்று முயன்று தோல்வி கண்டாள். அவளுக்கே ஆறுதல் கூற வேண்டியிருக்க எனக்குக் கூறினாள் ஆறுதல் வார்த்தைகள். தன் துணைவனின் நெருக்கத்தை நாடி வந்தவள், இன்று அந்தத்

துணைவனால் திரஸ்கரிப்பட்டு உள்ளத்து-உணர்வுகளை — இளர்ந்தெழும் இனிய எண்ணங்களைப் பொசுக்கிக் கொண்டு எனக்காகப் புன்னகைக்கிறாள் — புளகிக்கிறாள். வெம்பாலை அருகே ஒரு நீரூற்றுச் சுரப்பதைப் போல, ஸீனத் எனக்காக இன்பகீதம் இசைக்கிறாள்!

ஸீனத்! எந்தவித எதிர்பார்ப்புகளும் இன்றி எனக்காக நீ ஆற்றும் சேவைக்கு நான் தரும் காணிக்கையை நீ ஏற்றுக் கொள்வாயா? உன்னுடைய வறண்ட வாழ்க்கையில் நிலையான ஒரு இடத்தை ஏற்படுத்தித் தந்தால் அன்புடன் பெற்றுக் கொள்வாயா?

ஆறு மாதங்களாயின-பர்வின் இயற்கை எய்தி.

வழக்கம்போல அன்றாட வேலைகள் — கடமைகள் நிகழ்ந்து கொண்டே இருந்தன.

''தம்பீ, கமால்!''

திரும்பினேன். ஸீனத்தின் தந்தை முஸாதிக்!

''என்னங்க....?''

''ஊர் மக்கள் பேசிக்கொள்றதைப் பார்த்தால் அப்படியேசெய்யலாம்னு தோணுது... சாடை மாடையா ஸீனத்திடமும் கேட்டுப் பார்த்திட்டேன்... நெறஞ்ச மனசோடு சம்மதிக்கிறாள்.''

''நீங்கள் சொல்றது ஒன்னும் புரியல்லீங்களே....''

''எல்லாம் ஸீனத்தின் மறுமண விஷயம் தான்....''

''அப்படியா... இப்போ என்னங்க அவசரம்? கொஞ்ச நாள் போகட்டுமே...''

''தம்பீ, நம்ம வீட்லே ஸீனத் வேலை பாக்குறது எல்லாருக்கும் தெரியும். உங்க சம்சாரமும் காலமாகி ஆறேழு மாசமாகப் போகிறது... அதனாலே நடு வீட்டிலே ஒரு வயசுப் பொண்ணும் — ஒரு ஆணும் புழங்கிறது அவ்வளவு நல்லா இல்லே பாருங்க... மனுஷங்கதானே... எப்படியும் தவறு நடந்துடும். அதனாலே....''

''அதனாலே?''

''நாங்க ஏழைங்க — எளியவங்க என்ற சொல்லைத் தாங்கிக்கொள்வோம். ஆனால், ஒழுக்கங் கெட்டவங்கங்கற வார்த்தையை மட்டும் தாங்கிக்கொள்ள மாட்டோம்.''

''இப்போ என்ன நடந்து போச்சி?''

''வருமுன் காப்பதுதான் தம்பி அறிவுள்ளவங்க செய்யற காரியம். அப்படி இருப்பதினாலே ஸீனத்துக்கு ஒரு மாப்பிள்ளை பார்த்து இருக்கோம். பக்கத்து ஊரு சூலைமாநகரில் பெட்டிக்கடை வைச்சிருக்காரு. ஸீனத்தும் நம்ம வீட்டிலே ஒன்றரை வருஷமா வேலை பார்க்கிறாள்... கொஞ்சம் கணிசமா எதுவும் தந்து இந்தக் கல்யாணத்தை முடிக்க வச்சிங்கன்னா.....'' என்று நிறுத்திவிட்டுத் தொடர்ந்தார். ''நீங்க ஏன் தம்பி அழுறீங்க?''

''நானே ஸீனத்தைக் கல்யாணம் செய்யலாம்னு சற்று முன் வரை நினைச்சுக்கிட்டு இருந்தேன்.... ஆல்ரைட்! உங்கள் விருப்பப்படியே செய்யுங்கள்!''

''அந்த நெனைப்பு எங்களுக்கும் இல்லாமல் இல்லே! ஆனால்... உங்களுக்கு அப்படி ஒரு அவப் பேரு கெடைக்க வேண்டாம்னுதான் இந்த ஏற்பாடு...''

''அவப் பேரா?''

''ஆமாம்! அந்தத் தூத்துக்குடிக்காரன்— ஸீனத்தின் முந்தின கணவன் — என் பெண்ணைத் தலாக் சொல்லக் காரணமாக எதைக் குறிப்பிட்டான் தெரியுமா? ஸீனத்தை நீங்கள்... ஐயகோ...நாக் கூசுகிறது... தாலி கட்டாத மனைவியாக வைத்துக் கொண்டிருக்கிறீர்களாம்! எவ்வளவு பெரிய அபவாதம் பார்த்தீங்களா? உங்களுக்கே அவளைக் கல்யாணம் செய்து வைத்தால் அவன் கூறிய தவறான காரணம் சரியாகிவிடும் என்றே நாற்பத்தைந்து வயதான சூலைமாநகர் பெட்டிக்கடைக்காரருக்கு என் மகளை இரண்டாந் தாரமாகக் கட்டி வைக்கப் போறேன்....'' கண்களில் நீர் முட்டியது முஸாதிக்கிற்கு.

ஒரு தந்தையின் பொறுப்புணர்வில் கூறிய உண்மை! என்றாலும் ஸீனத்தின் வாழ்வு ஒரு அஸ்தமித்த வானம்!




டாக்டர் ராதாகிருஷ்ணன் துணை ஜனாதிபதியாக இருந்தபோது மனைவியை இழந்து விட்டார். எனவே அவர் ஜனாதிபதியானதும், அவர் படுக்கை அறையில் ஒற்றைக் கட்டில் போதும் என்று ராஷ்டிரபதி பவன் நிர்வாகிகள் முடிவு செய்தார்கள். அங்கே வழக்கமாகப் போட்டிருந்த பெரிய இரட்டைக் கட்டில்களில் ஒன்றை மிகவும் கஷ்டப்பட்டு அகற்றி, அந்த மாறுதலால் அறையில் வித்தியாசம் தெரியாதபடி தரை விரிப்பு ஆகியவற்றை அவசர அவசரமாக ஒழுங்கு செய்து முடிப்பதற்கும், பதவிப் பிரமாணம் முடித்துக் கொண்டு டாக்டர் ராதாகிருஷ்ணன் தம் அறையைப் பார்க்க வந்ததற்கும் சரியாக இருந்தது.

''நல்ல வேளை, இரட்டைக் கட்டில்களைப் பார்த்திருந்தால், மனைவியை இழந்த இவருக்கு மனக் கஷ்டமாக இருந்திருக்கும். சரியானபடி எல்லாவற்றையும் அமைத்து விட்டோம் என்று திருப்திப் பட்டுக் கொண்டிருந்த அலுவலர்களைப் பார்த்து புதிய ஜனாதிபதி கேட்டார்; ''என்ன ஒரே கட்டில்தானே இருக்கிறது?'' இரண்டாவது கட்டிலையும் கொண்டு வருமாறு உத்தரவிட்டார்!

பாவம், அந்த அலுவலர்களுக்குத் தெரியாத விஷயம் ஜனாதிபதியின் பழக்கம். அவர் படுப்பதற்கு ஒன்று; அடிக்கடி படிக்கவும் குறிப்பு எழுதவும் வேண்டிய ஏராளமான புத்தகங்களையும் குறிப்புத்தாள்களையும் வைப்பதற்கு மற்றொன்று — என்று இரண்டு கட்டில்கள் அவருக்கு எப்போதும் தேவையாக இருந்தது!

முன்னாள் ராஷ்டிரபதியின் மகள் திருமதி சுசீலா ராவ் கூறக் கேட்டவர்:

- தம்பி சீனிவாசன்



# GH

**ம.வி.ஆர**

## அத்தியாயம் 19

நடேசனுக்குப் படுக்கை கொள்ளவில்லை. அரை மணி நேரம் முன்புதான் மல்லிகா அவரைக் கடிந்துவிட்டு (உப்புமாவும் ஆவக்காய் ஊறுகாயும் சாப்பிட முற்பட்டால் யார்தான் கடிந்து பேச மாட்டார்கள்?) அர்ஜுனனுடன் போயிருந்தாள். அதற்குச் சில நிமிடங்கள் முன் மிஸஸ் பாரேதி ராமனுஜன் 'ஜோசியர்' பெயர்ப் பலகையுடன் திரும்பிச் சென்றான். எல்லாம் எப்போதோ நடந்த நிகழ்ச்சிகள் போலத் தோன்றின. வயிற்றுக்குச் சற்று கீழே 'கருக்' 'கருக்' கென்று ஒரு வலி காலையிலிருந்தே அவரை இம்சைப் படுத்திக் கொண்டிருந்தது. இம்மாதிரி வலிக்குக் காரணம் பசி என்றுதான் அவர் நினைத்திருந்தார். பசி என்பது அவருடன் கூடப் பிறந்தது. எப்போதும் ஏதாவது சாப்பிட்டுக்கொண்டே இருக்க வேண்டும். ஆனால் அவருடைய வாழ்க்கை நிலை அவருடைய தேவைகளையோ ஆசைகளையோ என்றுமே பூர்த்தி செய்ததில்லை.

அன்றைய வலியும் பசி காரணமாக எழுந்தது என்று நினைத்த அவருக்கு முதலில் மல்லிகா மீதும் அர்ஜுனன் மீதும் கோபம் வந்தது.

அவருடைய பசியை உப்புமா ஓரளவு தீர்த்திருக்கும். ஆஸ்பத்திரி என்று இருந்தால் கட்டுப்பாடுகள் இருக்கத்தான் இருக்கும். டாக்டர்கள் ஆயிரம் கட்டளைகளை விதித்து விட்டுப் போவார்கள். 'இதைச்சாப்பிடக் கூடாது', 'அதைச் சாப்பிடக் கூடாது' என்று வாய்க்கு வந்தபடி கூறுவார்கள். ஆனால் உடம்பின் பல உபாதைகளில் பசியும் ஒரு உபாதை என்று எவ்வளவு பேர் உணர்ந்து, அதற்குத் தக்கபடி உதவி செய்கிறார்கள்!



அவருடைய 'சுருக்' 'சுருக்' வலிக்குக் காரணம் பசி பசி பசிதான்.

நிமிடங்கள் மாதங்களாகி, வருடங்களாகி யுகங்களாக நீண்டன. திடீரென்று ஓர் இடத்தில் அடங்கி நிற்கும் நீர், விடுதலை கிடைத்ததும் நாலா பக்கமும் பரவி ஓடுவது போல வலி பரவலாயிற்று.

''ஸிஸ்டர்!'' என்று கத்தினார். அவரால் வலியைத் தாங்க முடியவில்லை.

''ஏன் லோலோன்னு கத்தறே?''

''வலி... வலி... ரொம்ப வலிக்கிறது...'' நடேசனுக்குக் கண்களிலிருந்து நீர் வழிந்தது.

''சாயங்காலம் துன்னியா?''

''வலி....''

நர்ஸ் ஜி.எச்.சில் ஒரு பழம் பெருச்சாளி. யார் மாய்மாலம் செய்கிறார்கள், யார் பொய் சொல்லுகிறார்கள், யார் உண்மையிலேயே அவஸ்தைப்படுகிறார்கள் என்பதை நொடியில் அறிந்து புரிந்து கொண்டு விடுவாள்.

நடேசன் தம் இரு கை விரல்களாலும் அடிவயிற்றை அமுக்கிக் கொண்டு கதறியது அவளை ஒரு கணம் யோசிக்க வைத்தது. அடுத்த கணம் ஓடச்செய்தது.

எல்லாம் மின்னல் வேகத்தில் நடைபெறலாயின. டாக்டர் வந்தார். பார்த்தார். இரண்டு பேர்கள் ஸ்ட்ரெச்சருடன் வந்தனர். நடேசன் பிரயாணத்தைத் தொடங்கினார்.

சொந்த வாழ்க்கை வேறு, தொழில் வாழ்க்கை வேறு என்ற லட்சியத்துடன் செயல்படுகிறவள் லில்லி. இரவு நேர டியூட்டி என்று வந்துவிட்டால் கோடீஸ்வரனே 'விளையாட்டுக்கு' அழைத்தாலும் இணங்க மாட்டாள். 'டாண்' என்று குறித்த நேரத்தில் வார்டில் ஆஜராகிவிடுவாள். கடந்த இரண்டு மூன்று நாட்களாக இன்டென்ஸிவ் மெடிகல் கேர் யூனிட்டில் வேலை. இதை அவள் ஒரு பெருமையாக நினைத்துக் கொண்டிருந்தாள். பெரிய பெரிய டாக்டர்கள் ஒரு மனித ஜீவனைக் காப்பாற்ற மல்லுக்கு நிற்கும் காட்சியை ஐ.எம்.சி.யூ.வில்தான் பார்க்கலாம்.

லில்லியை அம்மாதிரியான டாக்டர் குழுவுக்கு ஒத்தாசை புரிய அனுப்பியிருக்கிறார்கள் என்றால் அது பெருமைப்பட வேண்டிய விஷயம்தானே?

நர்சுகள் விடுதியை விட்டு அவள் வெளியே வந்ததும்—

அம்மணியை மறந்தாள்.

தன்னுடைய 'பிரத்தியேக' சிகரெட்டை மறந்தாள்.

ஓட்டல் அறைகளை மறந்தாள்.

ஆண்களின் அவசர வெறிகளை மறந்தாள்.

இன்டென்ஸிவ் கேர் யூனிட் ஒன்றுதான் கண் முன் நின்றது.

சரியாக ஏழு மணிக்கு இரண்டு பேர் ஒரு ஸ்ட்ரெச்சரில் ஒரு நோயாளியைப் போட்டுக் கொண்டு வந்தார்கள். அவருடைய வருகையை ஏற்கனவே அறிவித்திருந்தார்கள். ஒரு கட்டில் தயாராக இருந்தது. இரண்டு நிபுணர்கள், அவர்களுடைய நான்கு உதவியாளர்கள், மற்ற சிப்பந்திகள் எல்லோரும்

தயாராக இருந்தார்கள். ஒரு அரசியல் தலைவருடைய விஜயத்துக்குக்கூட இப்படிப்பட்ட முன்னெச்சரிக்கையும் முஸ்தீபுகளும் இருக்க முடியாது.

வில்லியும் தயாரானான்.

ஸ்ட்ரெச்சருடன் வந்த நர்ஸ் நடந்ததையெல்லாம் மீண்டும் ஒரு முறை விளக்கிவிட்டு, நடேசனுடைய ஜி. எச். சரித்திரத் தாளை நீட்டினாள்.

அதன் பிறகு டாக்டர்கள் போர் தொடுக்க வந்த யமனை எதிர்க்க ஆரம்பித்தார்கள்.

நடேசன் மயக்கத்தில் இருந்தார். ஆனந்த மயக்கம். என்னென்னவோ யார் யாரோ பேசுவதெல்லாம் அவர் காதில் விழவில்லை. இன்ப லாகிரியில் அவர் மனம் லயித்துப் போயிருந்தது. பசி தாகம் துக்கம் போன்ற எந்த இம்சையும் இல்லை.

அவருடைய மனைவி வந்து நின்றாள். முகம் சற்றே சுருங்கியது.

மல்லிகா வந்தாள்.

மலர்களின் நறுமணம் அவர்களைச் சூழ்ந்து கொண்டது.

மல்லிகா கால்மாட்டில் உட்கார்ந்து அவருடைய கால்களை வருடினாள்.

மல்லிகா தலைமாட்டில் உட்கார்ந்து தலையைத் தடவிக் கொடுத்தாள்.

இதம், இதம், சுகம், சுகம்.

சென்னையில் ஒரு பெரிய பங்களா. பெயர் சலவைக் கல்லில் பொறிக்கப்பட்டிருந்தது.

'வராக மிஹிரம்'

காம்பவுண்டுக் கேட்டின் இன்னொரு பக்கத்தில் இன்னும் ஒரு சலவைக் கல். அதில் அவருடைய பெயர்.

ஜோசிய ரத்னாகர நடேசனார்.

**ராஜாஜி — ஒரு கணக்கு!**

ராஜ்மோகன் காந்தி எழுதிய ராஜாஜி வாழ்க்கை வரலாறு நூலின் ஒரு பிரதியை வினோபாஜியிடம் ஆசி கோரி அளித்த போது அவர் அதைச் சில விநாடிகள் புரட்டிப் பார்த்தார். பிறகு ஒரு காகிதத்தில் சின்ன கணக்குப் போட்டார் :

சத்தியம் + அன்பு + பரிவு = ராஜாஜி



பாரேதி ராமனாதன் இரண்டு கார்களுடன் வருகிறான்.

ஒரு காரையும் டிரைவரையும் அவரிடம் ஒப்படைக்கிறான்.

அவன் கொண்டுவந்த அவல் கேசரியையும் தோசைகளையும் பார்த்து அவர் புன்முறுவல் செய்கிறார்.

அவருடைய ஜரிகைக் கரை வேஷ்டி சற்றே இறுக்கமாகப் படுகிறது. சில்க் ஜிப்பாவைத் தூக்கி விட்டுக் கொண்டு வேஷ்டியைத் தளரக் கட்டிக்கொள்கிறார். மோதிரத்தின் வைரம் கண்ணைக் கூசச் செய்கிறது.

அவர் ஒரு மேஜை முன் உட்கார்ந்திருக்கிறார்.

ஒரு படகுக் கார் வருகிறது.

தட்டு நிறையப் பழங்கள்.

ஆப்பிள், திராட்சை, சபோடா, மலைப்பழம், ஆரஞ்சு...

மேஜை மேல் கட்டங்கள், சோழிகள்.

பஞ்சாங்கங்கள்.

படகுக் கார் பழத் தட்டை வைக்கிறது. பாக்கெட்டிலிருந்து ஒரு கற்றை நோட்டை எடுத்துக் கொடுக்கிறது.

நடேசன் முறுவலிக்கிறார்.

மல்லிகா வருகிறாள்.

தலை நிறைய பூ.

கழுத்து நிறைய நகை.

கை நிறைய வளையல்.

பட்டுப் புடவை.

நெற்றிக் குங்குமம் வைரத்துடன் போட்டி போடுகிறது.

அவளைத் தொடர்ந்து அர்ஜுன் வருகிறான். சிரிக்கிறான்.

அவர் நிற்கிறார்.

இருவரும் சேர்ந்து நமஸ்கரிக்கிறார்கள்.

நடேசன் மெய் சிலிர்க்கிறார்.

வில்லி தளர்ந்துபோனான்.

மூன்று டாக்டர்கள்.

அவசர எக்ஸ்ரே.

அவசர இரத்தப் பரிசோதனை.

அவசர கார்டியோகிராஃப்.

வயிற்றினுள் ஓர் ஊற்றுப் பிறந்துவிட்டது. ஊற்று எங்கே என்று கண்டுபிடித்தாகிவிட்டது.

ஆனால் ஊற்றை அடைக்க முடியவில்லை.

பீரிட்டுப் பாயும் நீரை எந்த மதகாலும் நிறுத்த முடியவில்லை.

மருந்தால் முடியவில்லை.

ரண சிகிச்சைக் காலம் கடந்துவிட்டது.

பிரக்ஞை இல்லாமல் வந்தவர் பிரக்ஞை இல்லாமலேயே—

வேறு ஒரு ஸ்ட்ரெச்சரில் போய்விட்டார்.

அவர் சென்ற இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு இன்னொரு விதமாக அழைத்துச் செல்லப்படுவார். அதன் பிறகு ஜி.எச்.க்கு மட்டுமென்ன, எங்கேயுமே திரும்பி வரமாட்டார்.

வில்லி நடேசனுடைய ஜி. எச். சரித்திரத் தாளைப் பார்த்தான். படித்தான்.

அன்கான்ஷியஸ்.

ஸடன் ஹெமரேஜ்.

லிவர் டாமேஜ்.

கிட்னி நாட் ஃபங்ஷனிங்.


சென்னை
மிட்லண்ட் A/c
பகல் 11·45 மணி
பாரத் • உமா
தினசரி 3 காட்சிகள்
மற்றும் தென்னாடெங்கும்
டிசம்பர்
5 உ
முதல்
புரொடக்ஷன்ஸ்
சாவித்திரி
A
கதை, டைரக்ஷன்
பரதன்
கவிஞர் கண்ணதாசன் • M.S. விஸ்வநாதன்
A.L. நாராயணன் • ராமசந்திரபாபு

கார்டியாக் அரெஸ்ட்.

பேஷண்ட் டைட் அட் ட்வெண்டி ஃபிஃப்டி ஸெவன்.

லில்லி அழுதாள்.

"அப்பா!"

மாப்பிள்ளை ராஜாமணி இன்னும் தூங்க வில்லே. "என்னடா அர்ஜுன் மணி பன்னெண்டுக்கு மேலாறது... என்னை திடீர்னு வந்தே... எனக்கு ஏதேனும் ஆயிடுத்துன்னு யாரேனும் தகவல் கொடுத்தார்களா?"

"நடேசன் போயிட்டார்."

"யார்டா நடேசன்?"

"மல்லிகாவோட அப்பா!"

"அடப் பாவமே. எப்படி? ஆக்ஸிடண்டா இல்லே...."

"இதே ஜி. எச்.சில் மல்லிகாவும் வேம்புவும் பாடியுடன் காத்திருக்கிறார்கள்..."

"எனக்கு டெட் பாடியைப் பார்க்கப் பிடிக்காதுடா அர்ஜுன்."

"நான் அதுக்குக் கூப்பிட வரலே."

"பின்னே?"

"ஒரு பெர்மிஷன்."

"என்ன?"

"மல்லிகாவுக்கு யாரும் இல்லே."

"நீ இருக்கியே?"

"மெட்ராஸ்லே வீடு இல்லே."

"அவ வேலைக்கு வந்தப்போ பேச்சிலிருந்து இந்த ஊர்லே இருக்கிற மாதிரிப் பட்டுது?"

"அவ உங்களுக்குத் தெரிஞ்ச நடேசனுடைய பெண் அப்பா!"

"ஜோசியனு?"

"ஆமாம்."

"ஆறே முக்கால் ரூபாயைக் கோட்டை விட்டவனுடைய பெண்ணு மல்லிகா?"

"ஆமாம்ப்பா!"

"இருந்தாலும் நல்ல பெண். அவன் ஒரு முட்டாள். உனக்கு செவ்வாய் தோஷம், அற்ப ஆயுசுன்னுலும் நா கூசாமல் சொன்னவன். இப்பப் பாரு அவனே..."

"அதை மறந்துடுங்கோ அப்பா."

"சரி, மறக்கிறேன். இப்ப உனக்கு என்ன வேணும்?"

"உங்க பெர்மிஷன்."

"எதுக்கு?"

"மல்லிகாவுக்கு...."

"அதுதான் உன்னைத் தவிர யாரும் இல்லையே... விஷயத்துக்கு வா."

"ஜி. எச்.சிலிருந்து ஒரு குதிரைவண்டியிலே பாடியை எடுத்துண்டு போக வேண்டாம்னு பார்க்கிறேன்."

"ஏன், கார் என்னாச்சு?"

"அது இருக்கு."

"பின் என்ன?"

"நேரே காட்டுக்குப் போறது அவ்வளவு உசிதமாப் படலே."

"நம்ம வீட்டுக்கு எடுத்துண்டு போகணுங்கறியா...."

"ஆ....ஆமாம்ப்பா..."

"அதுக்கு ஏண்டா தயங்கறே, குழையறே; செய்யேன்!"

"தாங்க்யூ ஃபாதர்."

"அர்ஜுன்."



"உங்க மகள் குடும்பக் காரியங்களை நன்றாகக் கவனிப்பாள் என்று நீங்க சொன்னா போதாதா? பெண் பார்க்கிற நேரத்தில் நிரூபிக்கக் காட்டணுமா?"

"அப்பா?"

"பணத்தைப் பாராதே."

"சரிப்பா."

"மல்லிகா ரொம்ப அழறாளா?"

"ரொம்ப இல்லே."

"அவளை நன்னாக் கவனிச்சுக்கோ. ரெண்டு மூணு நாளுக்கு அவள் என்னைக் கவனிக்க வரவேண்டாம்."

"சரி அப்பா... அவகிட்டச் சொல்றேன்."

"அவ அப்பா பேர்லே எனக்கு விரோதம் கிடையாதுடா.. ஆத்திரம்தான். உனக்கு அற்பாயுசுன்னு என் மூஞ்சிக்கு நேரே சொன்னான் பாரு... ஆறே முக்கால் ரூபாய் அவனை வெளியே அனுப்ப ஒரு காரணம்..."

"உங்க மனசு எனக்குத் தெரியும் அப்பா!"

"யார் கொள்ளி?"

"நானே...."

"நானே அதைச் சொல்லலாம்னு இருந்தேன். போடு. இதெல்லாம் நல்ல காரியம். பெத்த அப்பனுக்குப் போடலே சிலதுகள், கொடுத்து வைக்கறதில்லே... சரி, போ... அவள் மூணு முணுப்பாள்... லட்சியம் செய்யாதே. வேணும்னு ஏதாவது ஒரு ஓட்டல்லே ரூம் எடுத்துத் தங்கிக்கட்டும்."

"நான் வரேம்ப்பா."

அர்ஜுன் கார்டியாலஜி பிளாக்கிலிருந்து மார்சுவரிக்கு விரைந்தான்.

"அப்பா சம்மதிச்சுட்டார்."

வேம்பு இன்னும் கலங்கிய முகத்துடன் இருக்க, மல்லிகா "அம்மா வரும் வரையில் காத்திருக்க வேண்டாம், அர்ஜுன்!" என்று நிதானமாகக் கூறினாள்.

"அப்படியா சொல்றே?"

"அப்பாவை அவள் மதிச்சிருந்தா, உறவுக்காரன் வீட்டிலே — அது என்னதான் அண்ணன் முறையாக இருந்தாலும், போய் இருக்க மாட்டா."

"யார்டா அர்ஜுன், காரியங்களைச் செய்யப் போறு?" வேம்பு விசும்பினாள்.

"ஏன், நான் இருக்கேனே!"

மல்லிகா ஒரு கணம் திடுக்கிட்டாள். சமாளித்துக்கொண்ட பின் அவன் கூறியதை நினைத்துப் பார்த்தபோது அவளுடைய நெஞ்சம் அவன் காலடியில் விழுந்தது.

(தொடரும்)

# நன்றியின் பரிமாணங்கள்

அய்க்கண்

**1801**ம் ஆண்டு பிப்ரவரி மாதம் இரண்டாம் தேதி. இரவு நேரம்.

பாளையங்கோட்டையை நோக்கி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது ஒரு குதிரை வண்டி. அதன் உள்ளே வெள்ளைக்காரர் பெக்கெட்டும் மனைவி மேரி விஜேலாவும் கவலை கப்பிய உள்ளங்களுடன் அமர்ந்திருந்தார்கள். வெளியூருக்கு ஒரு முக்கியமான வேலையாகச் சென்றிருந்த அவர்களுக்குப் பாளையங்கோட்டைச் சிறை தாக்கப்படும் செய்தி கிடைத்ததும் வேகமாகத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

பாளையங்கோட்டைக்குப் பன்னிரண்டாவது மைல் தூரத்தில் வந்து கொண்டிருந்த போது, சாலை ஓரத்தில் யாரோ ஒருவன், 'ஐயோ, அம்மா! அம்மா!' என்று முனகிக் கொண்டு கிடப்பது அவர்கள் காதில் விழுந்தது.

''ஷ்.... வண்டியை நிறுத்து!'' என்று வண்டிக்காரனைப் பார்த்துக் கூவினாள் விஜேலா.

கீழே இறங்கிய அவள், நிலா வெளிச்சத்தில் ஒருவன் உடலெல்லாம் இரத்தம் வழிய, பாதி நினைவிழந்து, வலி பொறுக்காமல் அரற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு பதறினாள். வண்டியிலிருந்த முதலுதவிப் பெட்டியை எடுத்து வந்து பஞ்சாலே இரத்தத்தைத் துடைத்துக் காயங்களுக்கு மருந்து வைத்துக் கட்டி, குளிர்ந்த நீரை அவனது முகத்தில் தெளித்து மயக்கத்தைத் தெளிய வைத்தாள்.

நீரின் குளிர்ச்சியால் கண் விழித்த அவன், 'தண்ணீர், தண்ணீர்' என்று காய்ந்த உதடுகள் துவண்டு துடிக்க, ஈன ஸ்வரத்தில் முனு முனுத்தான். உடனே அவனுக்குச் சிறிது தண்ணீர் ஊட்டிவிட்டு, ஃப்ளாஸ்கிலிருந்த காப்பியில் ஒரு கோப்பை எடுத்து அவன் வாயில் மெல்ல மெல்ல ஊற்றினாள்.

சில வினாடிகளில் அவனுடைய நினைவு முழுதாகத் திரும்ப எழுந்து உட்கார்ந்தான்.

''அம்மா! நீங்கள் யார் என்று எனக்குத் தெரிகிறது. நீங்கள் என்னைப் பெற்ற தாய் மாதிரி; என் கூடப் பிறந்த சகோதரி மாதிரி'' என்று குரல் தழுதழுக்க அவளுக்கு நன்றி தெரிவித்தான் அவன்.

''ஏம்பா, நீ யார்? உனக்கு எப்படி இவ்வளவு காயம் ஏற்பட்டது?'' என்று விசாரித்தார் பெக்கெட்.

''துரையே! நான் தரகு வியாபாரி. பாளையங்கோட்டையிலிருந்து மணியாச்சிக்குப் போய்க் கொண்டிருந்தேன். வழியிலே, வெள்ளைக்காரப் படைக்கும் ஊமைத்துரை ஆள்களுக்கும் நடக்கின்ற சண்டையிலே சிக்கிக் கொண்டு விட்டேன். வெள்ளைக்காரர்கள் சுட்ட குண்டுகள் என் உடம்பிலே பட்டு, காயத்தோடு தப்பி ஓடி வந்தேன். இந்த இடத்திலே வரும்போது மயங்கி விழுந்து விட்டேன் போலிருக்கிறது'' என்றான்.

''அப்படியா? ... சண்டை இன்னும் நடந்துகொண்டிருக்கிறதா? அங்கே ஊமைத்துரை இருந்தானா? நீ அவனைப்பார்த்தாயா?'' என்று ஆர்வத்துடன் கேட்டார் வெள்ளைக்காரத் துரை.

''ஊமைத்துரையைப் பார்த்தேன்.. அவர் இந்நேரம் பாளையங்கோட்டை சிறையிலிருந்து தப்பித்து ஓடியிருப்பாரே?''

அதைக் கேட்டதும், பெக்கெட் ஆத்திரத்துடன் வலது முஷ்டியை இடது உள்ளங் கையில் ஓங்கிக் குத்திக் கொண்டார்.

''ஓ!.... தப்பித்துக் கொண்டு விட்டானா ஊமைத்துரை? அவனைப் பிடித்துத் தூக்கில் போட்ட பிறகுதான் நாங்கள் நிம்மதியாக ஆள முடியும். ஓ. கே., டியர், லெட் அஸ் கோ.''

குதிரை வண்டி மீண்டும் வேகமாகப் பாதையை விழுங்கிக்கொண்டு சென்றது.

**பி**ப்ரவரி மாதம் முதல் தேதி.

வல்லநாட்டு மலையில் சிவத்தையாவின் தலைமையில் 330 பேர் ரகசியமாகக் கூடி,

**போட்டிக் கதை–13**



மறுநாள் பாளையங்கோட்டைச் சிறையைத் தாக்கி, ஊமைத்துரையையும் மற்றவர்களையும் விடுவிப்பது என்று முடிவு செய்தார்கள். நேரடியாகப் படையெடுத்துச் சென்று மோதாமல், தந்திரமான முறையில் ஊமைத்துரையை விடுதலை செய்வதே அவர்கள் திட்டம்.

காலையில் சிவத்தையாவும் வீரர்களும் மாறு வேடங்களில் பாளையங்கோட்டைக்கு வந்து சேர்ந்தார்கள். கூத்தாடிகளைப் போலவும், சாமியார்களைப் போலவும் ஜோசியர்களைப் போலவும் வேடம் போட்டுக்கொண்டு, ஆயுதங்களைத் தங்கள் உடைகளுக்குள் மறைத்து வைத்துக் கொண்டு, நகரத்தில் நடமாடினார்கள். சிலர் விறகு வெட்டிகளைப் போல் நடித்து, விறகுக் கட்டுக்குள் ஆயுதங்களை ஒளித்து வைத்து, அதிக விலை கூறிக் கொண்டு திரிந்தார்கள்.

கோட்டையைச் சுற்றிக் கூடிய பாஞ்சால வீரர்கள், சிறைச்சாலையின் கிழக்குப் புறத்தில் காவலிருந்த இரண்டு காவலர்களைத் தாக்கி உள்ளே பதினாறு பேர் புகுந்தனர். சிவத்தையாவும் மற்றவர்களும் வாசலில் நின்று கொண்டிருந்தார்கள்.

உள்ளே பெரும் சண்டை மூண்டது. தம் வீரர்களைக் கண்ட ஊமைத்துரையும் மற்றவர்களும் விலங்குகளை உடைத்தெறிந்தனர். பாஞ்சால வீரர்கள் சிறைக் கதவுகளை நொறுக்கித் தகர்த்தெறிய, எல்லோரும் தப்பி வெளியே ஓடி வந்தார்கள். துரத்தி வந்த வெள்ளைக்காரப் படைகளுக்கும் பாஞ்சால வீரர்களுக்கும் ஆங்காங்கே கைகலப்புப் போர் தொடர்ந்து ஏற்பட்டது.

வெள்ளையர்களின் படை பலத்தைப் பிரித்துச் சிதறடிப்பதற்காக, பாஞ்சால வீரர்கள் பல்வேறு திசைகளிலும் பிரிந்து பிரிந்து சென்று பாஞ்சாலங்குறிச்சி நோக்கி வந்தார்கள்.

ஊர் திரும்பிய ஊமைத்துரையைப் பார்த்ததும் மக்கள் புது உற்சாகமும் உத்வேகமும் அடைந்தனர்.

மார்ச் மாதம் ஏழாம் நாள்.

தனக்கு உரியதான தூத்துக்குடியை ஆங்கிலேயரின் பிடியிலிருந்து மீட்க 870 வீரர்களை அனுப்பினான் ஊமைத்துரை. அந்த வீரப் படை கோட்டையைச் சுற்றிக்கொண்டு தாக்கவும், உள்ளேயிருந்த ஆங்கிலத் தளபதி எதிர்த்துப் போரிட்டான்.

உரிமைக்காகப் போராடும் சுதந்திரப் படை முன், சோற்றுக்காகச் சண்டை போடும் கூலிப் படை எவ்வளவு நேரம் தாக்குப் பிடிக்க முடியும்? முடிவில் தோல்வியுற்றுச் சரணடைந்த தளபதியை, பாஞ்சாலப்படை தலைவன் பராக்கிரம பாண்டியன் முன் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

''பாவம்! இந்தக் கோழையை விட்டு விடுங்கள். வெளி நாடு போகும் கப்பல் ஒன்றில் இவனைச் சீமைக்கு அனுப்பி வையுங்கள்'' என்று கட்டளையிட்டான் பராக்கிரமன்.

கோட்டைக்குள் இருந்த படைக் கருவிகள், வெடி மருந்துகள் முதலியவற்றைக் கைப்பற்றிய பாஞ்சாலப் படை வீரர்கள், அங்கேயிருந்த பண்டகசாலையையும் உடைத்துப் பொருள்களை எடுத்தார்கள்.



அந்தப் பண்டகசாலையில் இருந்த அதிகாரி பெக்கெட் துரைதான். அவர் பாஞ்சால வீரர்களை எதிர்த்ததோடு, ஊமைத்துரையைப் பற்றி இழிவாகப் பேசவே, அவரைச் சிறைப் பிடித்துக் கொண்டு, பாஞ்சாலங்குறிச்சி திரும்பினார்கள்.

அரசவையில் அமர்ந்திருந்த ஊமைத்துரை முன்பு, வெற்றி முழக்கம் பின்னணியில் ஒலிக்க, வந்து நின்றான் பராக்கிரம பாண்டியன்.

''பராக்கிரம பாண்டியா! உன் வெற்றி கண்டு மிக்க மகிழ்ச்சி யடைகிறேன்'' என்று பாராட்டினான் மன்னன்.

''அரசே! அங்கிருந்த பண்டகசாலையின் அதிகாரி நம்மைப் பற்றி மிகவும் இழிவாக, கேவலமாகத் திமிரோடு பேசினார். ஆகையால் அவரை மட்டும் இங்கே கைதியாக இழுத்து வந்திருக்கிறேன்'' என்று பாண்டியன், பெக்கெட்டை அரசன் முன்னிலையில் நிறுத்தினான்.

பெக்கெட்டை நிமிர்ந்து பார்த்தான் ஊமைத்துரை.

அவையிலிருந்த சில வீரர்கள் கொதித்தெழுந்து குமுறினார்கள்:

அப்போது வாயிற் காவலன் உள்ளே வந்து பணிந்து நின்றான். ''அரசே! ஒரு வெள்ளைக்காரப் பெண் உங்களை நேரில் பார்க்க வேண்டும் என்று வந்திருக்கிறாள்...''

''உடனே வரச்சொல்'' என்று ஆணையிட்டான் மன்னன்.

சில விநாடிகளில் உள்ளே வந்து நின்ற தம் மனைவியைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனார் பெக்கெட்.

''வியோலா! நீ... ஏன்... எப்படி இங்கே வந்தாய்?'' என்று பதறினார் அவர்.

''தமிழ் நாட்டு மன்னர்களின் நீதியும் நேர்மையும் எனக்குத் தெரியும். அதனால்தான் தைரியமாக இங்கே வந்தேன்'' என்ற வியோலா, மன்னனைப் பார்த்து, முழந்தாளிட்டுப் பணிந்து, ''அரசே! என் கணவரைத் தவிர எனக்கு வேறு உறவும் இல்லை; ஆதரவும் இல்லை. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுங்கள்!'' என்று அரை குறைத் தமிழில் நீர் வழியும் விழிகளுடன் மன்றாடினாள்.

வியோலாவின் அவல நிலை மன்னனின் உள்ளத்தை நெகிழ வைப்பதை பெக்கெட் புரிந்து கொண்டார்.

''அவையோர்களே!... உங்கள் கருத்து என்ன? பெக்கெட் துரையை என்ன செய்வது?'' என்று கேட்டான் ஊமைத்துரை.

''அரசே! போர்க் களத்தில் ஒப்பாரிக்கு இடமில்லை. நம்மை இகழ்ந்து பேசிய இந்த எதிரிக்குக் கருணை காட்டக் கூடாது'' என்று ஒரு குரல் ஓங்கி ஒலித்தது.

''அப்படியானால், இந்தப் பெண் மாங்கல்யப் பிச்சை கேட்கிறாளே, அதை மறுத்து விடுவதா? அவையோர்களே! சுதந்திர வேள்வியில் அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் நம் நாட்டு வீரர்களையும், பெக்கெட் போன்று கூலிக்குப் போரிடும் வீரர்களையும் ஒப்பிட்டு நாம் பேசுவதில் அர்த்தமில்லை. இவரைப் போன்ற கோழைகளைக் கொல்வதன் மூலம் நம் மண்ணுக்கே உரிய வீரப் பண்பாட்டை நாம் கொன்றுவிடக் கூடாது. நம் பண்பாட்டையும் தர்மத்தையும் நம்பி இங்கே

## புள்ளிகள்: செய்திகள்!



**கே. வி. ஸ்ரீநிவாசராகவன்**

● தமிழ்நாட்டில் இருமுறை முதலமைச்சர் பதவி வகித்த ராஜாஜி அன்றைய சூழ்நிலையில் பல்வேறு விஷயங்கள் குறித்து அரசின் கோப்புகளில் வரைந்துள்ள கருத்துக்களைப் புத்தகமாக வெளியிடுமாறு தமிழக அரசை ராஜாஜி நூற்றாண்டு விழாக் குழு வேண்டியது. அந்த வேண்டுகோளுக்கு இணங்கி ராஜாஜியிடம் 1952—54ல் நேர்முக உதவியாளராகப் பணிபுரிந்து தற்போது அரசின் சார்புச் செயலராக உள்ள திரு கே. வி. ஸ்ரீநிவாச ராகவனை, தமிழ்நாடு ஆவணக் காப்பகம், சம்பந்தப்பட்ட கோப்புக்களை ஆராய்ந்து செய்திகளைச் சேகரிக்குமாறு பணித்துள்ளது. அரசுக் கோப்புகளில் பாதுகாக்கப்பட வேண்டிய ரகசியங்களும் இருக்குமாதலால் இது குறித்து இறுதி முடிவு எடுக்க இரண்டாம் செயலர் திரு கா. திரவியம் தலைமையில் ஒரு குழு இயங்கும். கடந்த ஜூலை 1ந்தேதி முதல் இப்பணி நடைபெற்று வருகிறது.

**வானதி திருநாவுக்கரசு**

● எழுத்தாளர்களின் வசதி கருதி வானதி திருநாவுக்கரசு ஒரு காரியம் செய்கிறார். ஒரு புத்தகம் பிரசுரமாகி ஓராண்டு காலம் முடிவதற்குள் அதற்கான மொத்த ராயல்டி தொகையையும் கணக்கிட்டு எழுத்தாளருக்குத் தந்து விடுகிறார். புத்தகங்கள் விற்பனை ஆவதற்குக் காத்திராமல் இப்படி ஒட்டு மொத்தமாக கொடுப்பதால் அதை எழுத்தாளர் நல்ல விதமாக முதலீடு செய்து கொள்ளலாம், அல்லது கல்யாணம்போன்ற ஒரு குடும்ப நிகழ்ச்சிக்குப் பயன் படுத்திக் கொள்ளலாம். வருமான வரி அதிகமாகும் என்று கருதுவோர் தவிர மற்றவர்கள் மொத்தமாகப் பெற்றுக் கொள்கின்றனர்.



வந்து சரணாகதி அடைந்துள்ள இந்த ஆங்கிலப் பெண்ணுக்காக, பெக்கெட்டை விடுதலை செய்கிறோம்'' என்று அறிவித்தான் மன்னன்.

விஜேலா மறுபடியும் கீழே விழுந்து வணங்கி மன்னனுக்கு நன்றி கூறினாள். பெக்கெட்டும் முழந்தாளிட்டுப் பணிந்தார்.

விஜேலாவையும் பெக்கெட்டையும் ஒரு வண்டியில் ஏற்றி அனுப்பி வைக்க ஆணையிட்டான் ஊமைத்துரை.

**மா**ர்ச் மாதம் 31ம் நாள்.

*வெல்ஷ் என்னும் ஆங்கிலத் தளபதியால் † 'ஜிப்ரால்டர்' என்று வர்ணிக்கப்பட்ட பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைத் தகர்த்து, அழிக்கும் திட்டத்துடன் வெள்ளையர் படை முழு மூச்சுடன் தாக்கிக் கொண்டிருந்தது.

போர்க்களத்தில் ஒவ்வொரு பகுதிக்கும் நேரே சென்று, வீரர்களுக்கு உற்சாகம் ஊட்டிக்கொண்டிருந்தான் ஊமைத்துரை. அவன் தெற்குப்புறத்திலிருந்து வடக்கு நோக்கிக் கையில் வாளுடன் வரும்போது, எதிரே ஒரு வெள்ளையன் கையில் துப்பாக்கியுடன் வந்தான். அவன் வேறு யாரும் இல்லை; பெக்கெட் துரை!

''வாருங்கள், மிஸ்டர் பெக்கெட்! மனைவி யார் சுகமாயிருக்கிறாரா?... என்ன, மறுபடியும் அவருடைய மாங்கல்யத்துக்குச் சோதனை ஏற்படுத்தி விட்டீர்களே?''

கலகலவென்று சிரித்த மன்னனைப் பார்த்துத் திகைத்து நின்றார் பெக்கெட். கடமைக்கும் நன்றிக்கும் இடையே சிக்கித் தவித்த பெக்கெட் துரையின் தர்மசங்கடத்தைத் தீர்த்து வைத்தது ஓர் அம்பு.

நெஞ்சின் ஆழத்தை ருசிபார்த்த அம்பைப் பிடித்தபடி, கீழே விழுந்தார் பெக்கெட்.

''அரசே! என்ன இருந்தாலும், நன்றி மறந்த நாய்க்கு இந்தச் சாவு வேண்டியதுதான்...'' என்று எரிச்சலோடு கூறினான் வில்லுடன் அருகில் வந்த பேச்சிமுத்து.

சட்டென்று இதயத்தில் பலத்த இடி விழுவதை உணர்ந்து தடுமாறினான் ஊமைத்துரை.

'நன்றி மறந்தவன் பெக்கெட் மட்டுமா?... நான்—?' என்று தனக்குள் கேட்டுக்கொண்ட மன்னனின் மனக் கண்ணில் விஜேலாவின் அவலத் தோற்றம், கானல் உருவாய் நிழலாடிக் கிடந்தது...

'தாயே! இரண்டு மாதங்களுக்கு முன்னால்—பாதையில் காயம் பட்டு விழுந்து கிடந்த என்மேல் இரக்கம் காட்டி, தண்ணீரும் காப்பியும் கொடுத்துக் காப்பாற்றினாயே. அதற்கு நன்றிக் கடனாக — என் அவையில் நிராயுதபாணியாக வந்து நின்ற உன் கணவரைக் காப்பாற்றி உனக்கு மாங்கல்யப் பிச்சை தர முடிந்தது. ஆனால் இன்று, அவர் போர்க்களத்தில் எதிரியாக வந்து நின்றபோது—அவரைக் காப்பாற்ற முடியாமல் உன்னை விதவையாக்கி விட்டேன். நன்றி கொன்ற என்னை மன்னித்து விடு தாயே!...'

—ஊமைத்துரையின் விழிகளின் பரப்பில் நீர் கசிந்து திரண்டது.

---

* வெல்ஷ் — (Welsh)

† ஜிப்ரால்டர் (Gibraltar) ஐரோப்பாவில், ஸ்பெயின் நாட்டிலுள்ள ஒரு புகழ்பெற்ற கேந்திரமான கோட்டை.

---

**தொழிலதிபர்**
**நா. மகாலிங்கம்**

● ஒவ்வொரு வருடமும் தமது பிறந்த நாளை எப்படி கொண்டாடுகிறார் தெரியுமா? திருவிடைமருதூரில்



உள்ள மகாலிங்க சுவாமி கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்துவிட்டு ஏழைகளுக்கு அன்னதானம் செய்கிறார்.

**டாக்டர் மா. நன்னன்**

தந்தை பெரியாரின் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாட எண்ணிய தமிழக அரசு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. பெரியார் வரலாற்றை உருவாக்கவென ஓர் உட்குழு அமைக்கப்பட்டது. அக்குழு பேராசிரியர் டாக்டர் மா. நன்னன் தலைமையில் பெரியாரின் வாழ்க்கை வரலாற்று நூலை உருவாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது. இக் குழு ஓராண்டாகப் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றுக்குத் தேவையான சான்றுகளைப் பல்வேறு இதழ்களிலிருந்து தொகுத்து வருகிறது. இந்த வாழ்க்கை வரலாற்று நூல் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட விருக்கிறது.



பேட்டி: சிக்கி




## அத்தியாயம் 71

# மலைமீது மூவர்

பூர்ணகட் கடல் போரின் மறுநாள் அருணன் உதயமானபோது அவன் செந்நிறம் கடலின் நீலத்தையும் சற்றே சிவப்பாக அடிக்க முயன்று முடியாததால், அத்தனை சிவப்பையும் 'கடல் ராணி'யின்மீது நின்றிருந்த கடல் ராணி ரத்னா மீது பூசி அவளைச் சொர்ண மயமாக அடித்திருந்தான். அவள் அழகிய கன்னங்களிலும் நெற்றியிலும் விழுந்திருந்த பீரங்கி வெடி மருந்து பட்டைகள் இரண்டு அவள் அழகைக் குறைப்பதற்குப் பதில் சொர்ணத்துடன் கருப்பு வைரம் கலந்துவிட்டது போன்ற பிரமையை ஏற்படுத்தியதால், அருணன் இனி தனக்கு வேலையில்லை என்று கதிரவனுக்கு இடம் விட்டு கடல் பிராந்தியத்தை வெள்ளியாக அடித்துவிட்டான்.

அந்த வெள்ளிக் கிரணங்களில் மூழ்குவது போல் அசையாமல் நின்ற ராணி சுற்று முற்றும் தளத்தையும் கடல் பகுதியையும் நோக்கினாள். சுற்றிலும் மிதந்து கொண்டிருந்த பல பலகைகளும் அலைகளில் உருண்டு பூர்ணகட் துறைமுகத்துக்குள் நுழைந்து கொண்டிருந்த பாய்மரத் தண்டுகளும், கரையோரமாகப் புரண்டு கடைசியில் மணலில் ஒதுங்கிவிட்ட பிணங்களும் மனோகரமான மாலை நேரத்தை பயங்கரமாக அடித்திருந்தன. அந்தக் காலையில் அதிக சிந்தனை வசப்பட்டிருந்த கடல் ராணி கைகளில் இருந்த வெடி மருந்துக் கரியைப் பற்றி லட்சியம் செய்யாமல் நெற்றியைச் சிறிது துடைத்துக் கொள்ளவே அவள் அழகிய நுதல் கரியாகி, அவள் வதனம் பாதிக் கிரகணம் பிடிக்கப்பட்ட சந்திரனைப் போல் காட்சியளித்தது. அவள் சிந்தனையில் ஆழ்ந்திருந்ததன் விளைவாக மாலுமிகள் கடல் ஜலம் இழுத்து, தளத்தைக் கழுவிய போது நீர் அவள் காலையும் கழுவியதையும் கூடக் கவனிக்காமல் சிலை போல் நின்று கொண்டிருந்தாள் ரத்னா.

அதே தளத்தில் மற்றொரு புறம் நின்று கொண்டிருந்த சாருவும் ஆழ்ந்த சிந்தனையிலிருந்ததால் காற்றில் அவள் தலைக் குழல் பயங்கரமாக அலைந்ததைக் கூட அவள் கவனிக்கவில்லை. அவள் வெளுத்த உடையும் பால் முகமும் ராணியின் முகத்தையும் ஆடையையும் போலக் கரை படிந்து இருந்ததன்றி முந்திய நாள் பட்ட தோள் காயத்திலிருந்த ரத்தம் அவள் சட்டையின் ஒரு பகுதியை லேசாக நனைத்திருந்தும் அதைக் கூட அவள் லட்சியம் செய்யவில்லை. வெறித்துக் கடலை நோக்கிக் கொண்டிருந்தாள்.

'கடல் ராணி' தளத்தின் வடக்கு தெற்கு மூலைகளில் இரண்டு பெண்களும் சிந்தனை வசப்பட்டிருந்ததைப் பார்த்த துலாஜி, ஓரளவு அவர்கள் மன ஓட்டத்தைப் புரிந்து கொண்டிருந்தாலும் மரக்கலத்தின் மேற்குப் பலகையில் சாய்ந்து தலையை மார்பை நோக்கித் தொங்க விட்டுக் கொண்டிருந்த அனந்துக்கு என்ன யோசனை இருக்க முடியும் என்பது புரியவில்லையாகையால் பக்கத்திலிருந்த சங்கர்பந்தை நோக்கி ''திரிமூர்த்திகளையும் கவனித்தீர்களா?'' என்று வினவினான்.

சங்கர்பந்தும் ஏற்கனவே அவர்களைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தாராதலால் ''ஆமாம். எனக்கொன்றும் புரியவில்லை, போர் தான் முடிந்து விட்டதே'' என்றார்.

''வெற்றியும் கிடைத்து விட்டது'' என்றான் துலாஜி.

''ஆகையால் கொண்டாட்டத்துக்கு இது சமயம். சிந்தனைக்கோ சிந்தை சிதைவுக்கோ அல்ல'' என்றார் சங்கர் பந்த்.

துலாஜி தனது நெடிய ஒல்லிய உடலை நன்றாக நிமிர்த்தினான். ''சங்கர்பந்த்! நாம் முடிவு கண்டது அரசியல் பிரச்னைகளுக்கு'' என்று சுட்டிக் காட்டினான்.

''வேறு எதற்கு முடிவு காண வேண்டும்? போரில் வெற்றி கொண்டோம். பிரிட்டிஷ் கொள்ளைக்காரர்களை மட்டுமின்றி பிரிட்டிஷ் நிர்வாக பலத்தையும் ஓரளவு முறித்து விட்டோம்.'' என்ற சங்கர்பந்தின் புத்தியில் அப்பொழுதுதான் ஞானம் உதயமாகவே, அவர் சட்டென்று சொற்களை நிறுத்தி ''ஆம் ஆம், துலாஜி! நீங்கள் சொல்வது சரி. மனிதப் பிரச்னைகள் பாக்கியிருக்கின்றன'' என்று கூறி முகத்தில் குழப்பத்தைப் படர விட்டுக் கொண்டார்.

அந்தச் சமயத்தில் நூலேணியில் ஏறி கடல் ராணியின் தளத்தில் குதித்த லிவாலியர் நேராகத் துலாஜி இருக்கும் இடம் வந்தான். ''இரண்டு பெண்களும் ஒன்றாக நிற்கவில்லை'' என்று கையால் அவர்கள் இருந்த திசைகளைச் சுட்டிக் காட்டி, ''ஒன்று வட துருவம், இன்னொன்று தென் துருவம். துருவங்கள் சேருவதில்லை'' என்று சொல்லி நகைத்தான்.

துலாஜி லாபூஷேயுடன் கை குலுக்கினான். ''நேற்றைய போரில் உங்கள் தாக்குதல் பிரமிக்கத்தக்கதாயிருந்தது. மாக்ரேயின் இரண்டு கப்பல்களை மூழ்கடித்துவிட்டீர்கள்'' என்று பாராட்டவும் செய்தான்.

''கனோஜியிடம் ஒப்புக்கொண்ட பணியைச் செய்தேன்'' என்ற லிவாலியரைப் பிரமிப்புடன் பார்த்தார் சங்கர்பந்த். ''என்ன கனோஜியிடம் ஒப்புக்கொண்ட பணியா?'' என்றும் வினவினார் வியப்பு நிறைந்த குரலில்.

''ஆம்'' என்ற லிவாலியர், ''இதில் என்ன விசித்திரமிருக்கிறது?'' என்று வினவினான்.

''நீங்கள் வெள்ளையர். கனோஜி மராட்டியர்...'' என்று தடுமாறினார் சங்கர்பந்த்.

லிவாலியர் பெரிதாக நகைத்தான். ''நீங்களும் நானும் எப்படி? உங்கள் பக்கவில்



நின்று நான் போரிட வில்லையா?'' என்று வினவினான்.

சங்கர்பந்த் சிந்தனை வசப்பட்டார். இருப் பினும் சொன்னார்:

''நான் ஸார்கேல் அல்ல'' என்று.

''நீர் மால்வான் தளபதி. இருப்பினும் கொள்ளைக்காரர் கனோஜி ஸார்கேல், அதாவது மகாராஷ்டிர கடல் தளபதி. இருப் பினும் கொள்ளைக்காரர். நாமெல்லோரும் ஒரு குலம். இதில் வெள்ளை கறுப்பு கிடை யாது'' என்றான் லாபூஷே.

லாபூஷேயின் இந்தப் பொதுக் கொள் கையிலோ, நகைப்பிலோ சங்கர்பந்த் மயங்க வில்லை. தன்னையும் மீறிய ஏதோ ரகசியம் சமீப கால நிகழ்ச்சிகளில் இருக்கிறதென் பதை ஊகித்துக் கொண்டாலும் அதைப் பற்றி அவர் கேட்கவில்லை.

அவர் சந்தேகத்தை அதிகம் ஊன்றவிடாத துலாஜி சொன்னான்: ''தளபதி! சிந்து துர்க்கத்துக்கு அனந்த் வந்து சேருவதற்கு முன்னாலிருந்து ஏதேதோ திட்டங்கள் உரு வாயின. அவற்றைப் பிறகு விளக்கமாகச் சொல்கிறேன். நாம் உடனடியாகக் கவ னிக்க வேண்டிய விஷயங்களைக் கவனிப் போம். நாம் எத்தனை கப்பல்களை இழந் திருக்கிறோம், இருக்கும் கப்பல்களுக்கு ஏற்பட்டிருக்கும் சேதம் எவ்வளவு! இந்த விஷயங்களை முதலில் கவனிப்போம். வாருங்கள் தலைவி யின் அறைக்கு'' என்று சொன்னதோடு நில்லா மல் தலைவியின் அறையை நோக்கி நடக்கவும் செய் தான். சங்கர்பந்தும் லாபூஷேயும் அவனைத் தொடர்ந்தார்கள். ஆனால் கப்பலின் வடக்கு முனையிலும் தெற்கு முனையிலும் நின்றிருந்த இரு பெண்களும் அசையவில்லை.. அனந்தும் தொங்கப் போட்டிருந்த முகத்தைத் தூக்க வில்லை. ''அனந்த்! ஏய் அனந்த்!'' என்று துலாஜி உரக்கக் குரல் கொடுத்த, பிறகுதான்

அனந்த் தலையை நிமிர்த்தினான். சுற்று முற்றும் நோக்கினான். பூர்ணகட் துறை முகத்தை ஏராளமான கழுகுகள் வட்ட மிட்டுக் கொண்டிருந்தன. கரையில் ஒதுங் கிய பிணங்களைச் சில கொத்திக் கொண் டிருந்தன. பிணங்களைக் கொத்துவதில் ஏற் பட்ட போட்டியால் ஒரு கழுகு இன்னொரு கழுகைச் சிறகால் அடித்துத் தள்ளவே இரண்டுக்கும் சண்டை மூண்டு பிணத்தை விட்டு ஒன்றை யொன்று கொத்திக் கூச்சல் போட்டன. கழுகுகளோடு போட்டி போட முடியாத பெரிய கடல் கொக்குகள் நான்கு, மலை உச்சியின் ஒரு பகுதியில் உட்கார்ந்து ஒரு பிணம் ஓட உறு பிணம் வரும் நேரத்தை நோக்கிக் கொண்டிருந்தன.

உருண்ட பிணங்களிலொன்று அலைகளால் மீண்டும் உருட்டப்பட்டு மலை ஓரத்துக்கு வரவே அவற்றை நோக்கிக் கொக்குகள் பறந்தன.

இவற்றை யெல்லாம் கவனித்த அனந்த் மனிதர்களுக்கும் கழுகுகளுக்கும் அதிக வித்தியாசம் இல்லை யென்று நினைத்தான். ''பிணத்தை விடக் கேவலமான பணத்துக்கு மனிதனும் இந்தக் கழுகுகளைப் போல் ஒருவனை யொருவன் கொத்திக் கடித்து ஒழிக்க முயலுகிறான்'' என்று தன்னுள் சொல்லிக் கொண்டான்.

''இரண்டு கழுகுகளின் சண்டையில் ஒதுங்கி விட்ட பிணத்தைக் கொத்த வந்த கொக்கைப் போலத்தான் பாரதமும் இருக்கிறது'' என்று உள்ளுக்குள் முணு முணுத்தான்.

துலாஜி அவனை நெருங்கி, தோள் மீது கை வைத்து ''அனந்த்!'' என்று அழைத்தான்.

''உம்'' என்று ஒரு ஹுங்காரம் மட்டும் அவனிடமிருந்து வெளி வந்தது.

''எந்தக் கோட்டையைப் பிடிக்கப் பார்க் கிறாய்?'' என்று கேட்ட துலாஜி அவன் தோளைக் குலுக்கினான்.

''அதோ கரையைப் பார்!''

''பார்த்தேன்.''

''என்ன புரிந்து கொண்டாய்?''

''இரண்டு கழுகுகளின் சண்டையில் கொக்கு பயனடைந்தது.''

''கொக்கு யார் தெரியுமா?''

''யார்?''

''பிரிட்டன், நாம் போரை வென்றுவிட் டோம்; பிரிட்டனை வெல்லவில்லை.''

''நீ அரசியல் பேசுகிறாய்'' என்றான் துலாஜி.

''இல்லை. உண்மை பேசுகிறேன்'' என்ற அனந்த் மீண்டும் யோசனையில் இறங்கினான்.

அந்தச் சமயத்தில் எதிரே இருந்த கோட் டையிலிருந்து மூன்று பேர் கடலை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த மலை உச்சிக்கு வந்து வரிசையாக நின்று கொண்டார்கள்.

அந்த மூவரைக் கண்டதும் துலாஜி அனந்தை நோக்கி, ''அனந்த்! நீதிபதிகள் வந்துவிட்டார்கள். நான் வாபூஷேயையும் பந்தையும் அழைத்து வருகிறேன்'' என்று கூறித் தலைவியின் அறையை நோக்கி விரைந் தான்.

அனந்த் அந்த மூவரையும் நோக்கினான். அவர்கள் மூவருக்குப் பின்னால் ஒருவன் பெரிய கொடி ஒன்றைப் பிடித்துக்கொண்டு வந்து நின்றான். அந்தக் கொடி ராணியையும் சாருவையும் கூட இவ்வுலகத்துக்கு இழுத் தது. இருவரும் அனந்த் இருந்த இடத்தை அணுகி அவனுக்கு இருபுறமும் நின்றார்கள்.

தலைவி அறைக்குள்ளிருந்து வாபூஷே யையும் சங்கர்பந்தையும் அழைத்து வந்த துலாஜி கரையையும் நோக்கி கப்பல் தளத்தையும் நோக்கினான். ''அங்கு மூவர் இங்கு மூவர்'' என்று மலை உச்சியையும் ராணி, அனந்த், சாரு மூவரையும் சுட்டிக் காட்டினான்.

''நாம் மூவர்'' என்று தன்னையும் சங்கர் பந்தையும் துலாஜியையும் சுட்டிக் காட்டிய வாபூஷே பெரிதாக நகைத்தான்.

மற்றவர்கள் நகைக்கவில்லை. ''சீக்கிரம் நீராடி உடை மாற்றுங்கள். நாம் கரைக் குச் செல்ல வேண்டும். நீதிபதிகள் காத் திருக்கிறார்கள்'' என்று கூறவே சங்கர்பந்த் நகர்ந்தார் தளத்துக்கு அடியிலிருந்த அறை நோக்கி. வாபூஷேயும் அவரைத் தொடர்ந் தான்.

''நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று துலாஜி கேட்டுக் கொண்டிருக்கையில் கடல் ராணி கப்பல் பலகையில் ஏறிச் சரே லென நீரில் குதித்தாள். அவளைத் தொடர்ந் தாள் சாரு. அனந்த் ஒரு விநாடி யோசித்தான். பிறகு அவனும் கடலில் குதித்தான். மூவரும் ஒன்றாகக் கரையை நோக்கி நீந்துவதைக் கண்ட துலாஜி இன்ப நகை கொண்டான். ''எந்தச் சண்டை முடிந்தாலும் இந்தச் சண்டை முடி யாது'' என்று தனக்குள் சொல்லிக்கொண் டான். ''இல்லை முடிந்து விட்டது முடிந்து விட்டது'' என்றான் அடுத்த விநாடி.

இரு பெண்களுக்கு இடையில் நீந்திய அனந்தின் மீது இரு பெண்களும் ஆளுக் கொரு கையைப் போட்டுக் கொண்டு ஒற் றைக் கையாலும் கால்களாலும் நீந்தி னார்கள். அவ்வப்பொழுது கால்களை உதைத்த போது அவர்கள் எழில்கள் அனந்தின் மீது பட்டுக் கொண்டிருந்ததால் அவர்கள் நீச்சல் சொர்க்க நீச்சலாக இருந்தது.

மலை உச்சிமீது நின்ற மூவரும் இந்த விந்தையைக் கண் கொட்டாமல் பார்த் தார்கள். (அடுத்த இதழில் முடியும்)

''அப்பா, உங்களுக்கு, 'பாரிஜாதம்'' பத் திரிகையிலிருந்து ஐம்பது ரூபாய்க்கு செக் வந் திருக்கு!''

''என் கதை ஒன்னும் அதிலே பிரசுரமாக லியே!''

''இனிமேல் கதை அனுப்பி எங்கள் கழுத்தை அறுக்காமல் இருப்பதற்காக இந்தச் சன்மானம்' என்று கூடவே ஒரு கடிதமும் இருக்கு அப்பா!''
-சிவசக்தி



# பொல்லாதவன்



ஊர்மிலை என்ற அழகான பெயரை தானே மாற்றி, 'தன்' ரசிகர்கள் ஏமாறு வண்ணம் ஸ்டைல்களை அள்ளித் தெளித்து, படாத இடத்தில் அடிபட்டதாக ஸ்ரீப்ரியாவிடம் நடித்து, காதல் காட்டி, தான் கொலை செய்வதைப் பார்த்த ஒரே ஐ விட்னஸ் லக்ஷ்மியை போலீஸ் ஸ்டேஷனில் 'ஆறு மணி ஆறு மணி' என்று பயமுறுத்தும் சூப்பர் ஸ்டார் ரஜனி—

பொல்லாதவர்தான்.

ஒன்றுமில்லாத கதையை வெட்டி ஒட்டி பிளாஷ் பேக்குகள் உதவியால் ஏதோ திரில்லர் போல சினிமாஸ்கோப்பில் கதை பண்ணும் டைரக்டர் முக்தா சீனிவாசன் கூட—

பொல்லாதவர்தான்.

உடன் நடிக்கும் ரஜனியை நடிப்பில் தூக்கிச் சாப்பிட்டு, செயற்கை வசனங்கள் பேசி, நிறைய இடங்களில் கதி கலங்க போலீஸிடம் உண்மையைச் சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவிக்கும் ஊர்வசி லட்சுமியும்—

பொல்லாதவர்தான்.

அப்புறம் ஓடியாடி உழைத்து....

(என்ன சார் விஷயத்துக்கு வருவதற்குள் அவசரப்பட்டுப் படத்துக்குப் போயிட்டீங்களா?

பொல்லாத போக்கிரி சார் நீங்கள்!

— நளினி சாஸ்திரி

# ரேடியோ மாமா (நாடகம்)

விகவசாந்தியின் பி.ஆர்.ஓ. சந்திரசேகர், ''விமர்சனம் எழுதுவது எங்களுக்கு மட்டுமில்லே, ஸார்; சபாக்களுக்கே பேருதவி! முன்பு 140 சபாக்கள் இருந்த சென்னையில் இன்று 100தான் உள்ளன தெரியுமா?'' என்றார். இந்த எண்ணிக்கை சரியோ தப்போ இப்படி தூஸ் வைத்த பிறகு விமர்சனம் எழுதாமலிருக்க முடியுமோ?

விசு இந்த நாடகத்தை வித்தியாசமாகச் செய்திருப்பதாக நாடகம் ஆரம்பிக்கு முன்னரே குறிப்பிட்டார் சந்திரசேகர். ''வழக்கமான விசுவை எதிர்பார்க்காதீர்கள்; ஒரு லைட் காமெடிதான்'' என்றார். அது உண்மை என்பதை நாடகம் நிரூபித்தாலும் விசுவுக்கு தமது ஆற்றலை லைட் காமெடியில் முழுமையாகக் கரைத்துவிட மனம் வரவில்லை. எனவே பார்ப்பஸ்ஃபுல்லாகவும் செய்திருக்கிறார். மனைவியாக வரப்போகிறவளிடம் என்னென்ன அம்சங்கள் இருக்க வேண்டும் என்று ஏகப்பட்ட கண்டிஷன்கள் போடும் வரன்களுக்கு ஏகப்பட்ட 'கனிர்' நாடகத்தில். ஆரம்பம் முதலே ''ரேடியோ மாமா'' விசு, மேடையை மையப் புள்ளியாக ஆக்கிரமித்துக் கொண்டுவிடுகிறார். இறுதியில் தமது கட்சியை எடுத்துச் சொல்லிவிட்டு மேல் துண்டை கௌபாய் பாணியில் ஒரு சுழற்றுச் சுழற்றி தோளில் போட்டுக் கொண்டு போகிற கையோடு, பாராட்டுக்களை மற்றவர்களுக்கு அதிகமாய் பாக்கி வைக்காமல் அள்ளிப் போட்டுக் கொண்டும் போய்விடுகிறார். கதை வசனம் டைரக்ஷன் எல்லாம் அவர்தான். சினிமா அனுபவம் திறமைக்கு மெருகேற்றியிருக்கிறது.

கதாநாயகிக்குக் கதைப்படியே வேதனையாக முகத்தை வைத்துக் கொள்வது தவிர வேறு வேலை யில்லை. எனவே பானுமதியைக் குறைகூறிப் பயனில்லை. 'செவிட்டு அப்பா' தூரால்யம் பழசு, 'ரொம்பப் பழசு' என்று எத்தனை தடவை சொன்னால் என்ன? செவிடன் காதில் ஊதிய சங்குதான். சந்துரு நடிப்பில் பிச்சுமணி கச்சிதமணி. டபுள் ரோல் ரங்காவுக்கு இரண்டு சபாஷ். கமலக்கண்ணனாகத் தோன்றும் கிருஷ்ணமூர்த்தியின் கழுத்து நொடிப்பு மிகை என்றாலும் அவர் வசனத்தில் விரசம் மிகையாகாமல் எட்டிப் பார்ப்பதோடு நிற்கிறதே என்று மகிழவேண்டியதுதான்.

ஆயிரத்துக்குக் கொஞ்சம் குறைவாகவே பொய் சொல்லி ரேடியோ மாமா நடத்தி வைக்கும் கல்யாணம் டைவோர்லை நெருங்கினாலும் சுபமாகவே முடிகிறது. கணவன் மனைவி ஜாதகப் பொருத்தம் இருக்கட்டும், விசுவுக்கும் நாடக மேடைக்கும் உள்ள எட்டுப் பொருத்தங்களில் ஆறு பழுதில்லை. மற்ற இரண்டைப் பெரிதுபடுத்துவானேன்?

- குட்டி கிருஷ்ணன்



நான் ஒரு காஸ்மெடிக் ரெப்.

பெயர்? ராமானுஜ வெங்கடேசப் பெருமாள். என்னுடைய நண்பர்கள் அழைப்பது ராம். அப்பா போன வருஷம் வரைக்கும் 'தண்டச் சோறு' என்று கூப்பிட்டுக்கொண்டிருந்தார். வேலை கிடைத்து முதல் மாதச் சம்பளக் கவரை அவரிடம் நீட்டியபோது அந்தத் 'தண்டச் சோறு' பட்டத்தை வாபஸ் வாங்கிக்கொண்டு, 'மகனே ராமானுஜா' என்று உச்சி மோந்தார். என் உயரம்? அமிதாப்பச்சன் காதுக்கு வருவேன். ஸ்டெப் கட்டிங் வைத்துக் கொள்ள ஆசைப்பட்டு இப்போதுதான் முடி வளர்க்க ஆரம்பித்திருக்கிறேன். கிருதா கொஞ்சம் கூடுதல் அடர்த்தியுடன் சர்ரென்று இறங்கியிருக்கிறது. நிறம்? நானே பெருமை அடித்துக் கொள்வதாக நினைத்துக் கொள்ளாதீர்கள். நான் வெற்றிலைப் பாக்கை மெல்லும்போது நீங்கள் என் எதிரில் இருந்தால், என் தொண்டை வழியே வெற்றிலைச் சாறு இறங்குவதைப் பார்த்துத் திகைத்துப் போவீர்கள்.

வயது? 4 × 7.

# கரையை மீறும் அலைகள்

## ராஜேஷ்குமார்

கல்யாணம்? பெரிய இடத்தில் பார்த்துக் கொண்டிருக்கிறேன். பெண் எப்படி இருந்தாலும் கவலையில்லை. பெண்ணுக்கு அப்பா—அதாவது என் மாமனார் ஆகப் போகிறவர் நல்ல 'பசை'யோடு இருக்க வேண்டும்.

விவரம் தெரியாத வயசில் அம்மா மைனஸ். ரிடையராகி ஈஸிச் சேரில் சாய்ந்து கொண்டு பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதைப் புத்தகத்திலிருந்து ஹெரால்டு ராபின்ஸின் பைரேட் வரைக்கும் படித்துக் கொண்டிருக்கும் அப்பா. உருப்படியாய் இருந்த ஒரே அண்ணன்தான் என்னைப் படிக்க வைத்தான். அண்ணன் இப்போதும் நெய்க்காரன் பட்டியில் எங்கள் குடும்பச் சொத்தான மூன்று ஏக்கர் நிலத்தில் என்னும் கொள்ளும் விதைத்துக் கொள்ளை கொள்ளையாய்ச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான்.

எம்.பி.பி.எஸ். படிக்க ரொம்பவும் ஆசைப்பட்டேன். மெட்ராஸ் யூனிவர்ஸிடி கைகளை அகல விரித்து எனக்கு 'பெப்பே' காட்டிவிட்டு, பி.எஸ்.ஸி. கெமிஸ்ட்ரிக்குப் போ என்றது. போனேன். கொடுத்ததைச் சிரத்தையாகப் படித்து முடித்து வஞ்சனையில்லாமல் முதல் வகுப்பில் தேறினேன்.

'இஃப் யூ ஆர் ஸ்மார்ட் அண்ட் எனர்ஜடிக்'—பம்பாயில் உள்ள ஒரு காஸ்மெடிக் கம்பெனி ரெப்ரஸெண்டேட்டிவ் போஸ்ட்களுக்காக என்னைப் போன்ற இளைஞர்களுக்காக வலை வீசியது. நான் ஒழுங்காய் ஷேவ் செய்து பவுடர் பூசிக்கொண்ட முகத்தோடு எடுத்துக்கொண்ட பாஸ் போர்ட் சைஸ் போட்டோவோடு அப்ளை செய்தேன்.

அடுத்த வார இறுதியில் இண்டர்வியூவுக்குக் கூப்பிட்டார்கள். கம்பெனி செலவில் முதல் வகுப்பில் ஜெயந்தி ஜனதாவில் சென்றேன்.

கம்பெனி நிர்வாகியான வழுக்கைத் தலைக்காரர் மெதுவான குரலில் கேள்விகளை அடுக்க—அழகான ஆங்கிலத்தில் ஆணித்தரமாகப் பதில் கூறி அவரை அயர வைத்தேன். இரண்டொரு சந்தேகங்களை அவரிடமே கேட்க முயன்றதைத் தொடர்ந்து அவர் முகத்தில் அரும்பிய வியர்வையோடு ''யூ... மே... கோ...'' என்றார்.

திரும்பி வருகிற ஜெயந்தி ஜனதா பிடித்து வீடு வந்து சேரவில்லை.

அதற்குள்—டெலிகிராமில் அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் பறந்து வந்தது.

கோயமுத்தூரில் குப்பை கொட்டச் சொல்லி உத்தரவு. ஒழுங்காகக் கொட்டிக் கொண்டிருக்கிறேன்.

ஆர். எஸ். புரம்.

கென்னடி தியேட்டருக்குப் பக்கத்தில் இருந்த தள்ளு வண்டி மறைவில் நின்று கொண்டு ஹேண்ட் பாக்கை கக்கத்தில் இடுக்கிக்கொண்டு பேல் பூரி சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

'ஹலோ ராம்' என்ற கட்டைக் குரல் கேட்டது. பக்கவாட்டில் திரும்பினேன்.

என்னோட சிநேகிதன் கார்த்தி ஸ்கூட்டரோடு நின்றிருந்தான்.

''இன்னுட்டு சீக்கிரம் வாடா ஒரு குட் நியூஸ் சொல்லணும்...''

''எஸ் இட்? இதோ வரேன். சேட்! பானி பூரி கான்ஸல் கரோ!'' சேட்டுக்குக் காசைக் கொடுத்துவிட்டு, கார்த்தியோடு நடந்தேன்.

''என்னடா குட் நியூஸ்?'' என்றேன்.

''எனக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுச்சுடா....''

''அடி சக்கை! கங்கிராட்ஸ்! பொண்ணு யாருடா?''

''ஊரு திருப்பூர். பொண்ணு எஸ்.எஸ்.எல். ஸி. படிச்சிருக்கா. பேரு பாக்கியலட்சுமி...''

நான் முகத்தைச் சுளித்தேன்.

''பாக்கியலட்சுமியா? எஸ்.எஸ். எல். ஸி.யா?''

''பேர்லேயும் படிப்பிலேயும் என்னடா இருக்கு? பொண்ணு நல்லா இருக்கா... டீஸண்டான ஃபேமிலி. போட்டோவை என்னோட அப்பா அனுப்பியிருக்கார். பார்'' அவன் தன் சட்டைப் பையினின்றும் ஒரு பாஸ்போர்ட் சைஸ் போட்டோவை உருவி என்னிடம் நீட்டினான்.

அலட்சியமாகப் பார்த்தேன். அழகாகத் தான் இருந்தாள். கன்னத்தில் ஒரு பரு தெரிந்தது. போட்டோவிலிருந்து பார்வையைத் திருப்பாமல் கேட்டேன். ''பொண்ணு பெரிய இடமா?''

கார்த்தி உதட்டைப் பிதுக்கினான். ''பொண்ணோட அப்பா ஏதோ ஒரு மில்லிலே ஹெட் கிளார்க்கா இருக்கார்... சுமாரான குடும்பம்தான். மூணு பொண்ணு... இவ மூத்தவ... பொண்ணு அழகு அடக்கம் என்கிறதனாலே அம்மாவுக்கும் அப்பாவுக்கும். ரொம்பவும் பிடிச்சிருக்கு...''

''வாழ்க்கையில நாம வசதியா வாழணும்னு நாம தேர்ந்தெடுக்கிற இடமும் வசதியா இருக்கணும்.. நீ அதில தவறிட்டே...''

''எனக்கு இருக்கிற வசதி போதுண்டா.. மாமனாரோட தயவோ சொத்தோ எனக்கு வேண்டியதில்லே...''

''உனக்குக் கல்யாண ஆசை ஜாஸ்தியாயிடுச்சு. பாக்கிய லட்சுமியோட படம் உன்னை மாத்திடுச்சு. எனி ஹௌ மை அட்வான்ஸ் கன்கிராட்ஸ்!''

அவன் கையைப் பற்றிக் குலுக்கினேன்.

அவன் கேட்டான்: ''உனக்கெப்போ கல்யாணம்?''

''உன்னை மாதிரி நான் அவசரப்படப் போறதில்லே. பசை உள்ள இடமா...அதுவும் வஜ்ஜிர பசையா இருக்கணும்... அந்த மாதிரி இடத்திலேதான் பொண்ணை எடுக்கப் போறேன். வரதட்சிணையா பத்தாயிரம்... தலை தீபாவளிக்கு வைர மோதிரம். ஆடிப் பண்டிகைக்கு வாட்ச்... ஆபீஸ் போய்வர ஸ்கூட்டர்... ஐஸ் வாட்டர் குடிக்க ஃப்பிரிட்ஜ் பாப் மியூஸிக் கேட்க ரேடியோகிராம்...''

நான் பேசிக்கொண்டே போக...

''அத்தனை வசதிகளோட இந்த ஜன்மத்திலே உனக்கு எவளும் கிடைக்க மாட்டா.''

''பார்க்கலாமா?'' — நான் ரோஷமாய்க் கத்த—

''பார்க்கலாம்'' — அவனும் கத்தினான்.

**கா**ர்த்தியோடு சவால் விட்டு மூன்று மாதம்கூட ஆகவில்லை.

அன்றைக்கு என்னோட அண்ணன் நெய்காரன்பட்டியிலிருந்து கடிதம் எழுதியிருந்தான். ஏதாவது பணம் கேட்டுக் கடிதம் எழுதியிருப்பானோ என்ற மன உளைப்போடு கடிதத்தைப் பிரித்தேன். படித்தேன்.

அன்புள்ள தம்பி ராமுவுக்கு!

உனக்கு ஓர் இடத்தில் பெண் பார்த்து வைத்திருக்கிறேன். பெரிய இடம். சேலத்தில் அவர் பத்தாவது பணக்காரராம். நான்கு பெண்கள். நாலாவது பெண்ணுக்குத்தான் உன்னைப் பார்த்திருக்கிறேன். சீர், செனத்தி, நகை, நட்டு, வாகனம் எல்லாம் சிறப்பாய்ச் செய்வார்களாம். நம் தரகர் சொன்னார். பெண் கொஞ்சம் மாநிறம்தான். ஆனால் லட்சணமாய் இருக்கிறாள்,





நீ ஒரு நாள் லீவு எடுத்துக் கொண்டு இங்கு வந்தால் சேலம் போய்ப் பெண்ணைப் பார்த்துவிட்டு வரலாம்.

சென்ன கேசவ நாராயண பெருமாள்

விட்டலாச்சார்யா படத்தில் வருமே ஒரு மாய ஜமுக்காளம், அதில் உட்கார்ந்து வான வெளியில் பறப்பதைப் போல் ஓர் உணர்வு என்னை வியாபித்துக் கொண்டது.

''அடேய்... கார்த்தி! பார்த்தியாடா... ஜயாவோட ஜாதகத்தை! எல்லாக் கிரகங்களும் உச்சமாய் இருந்தாலொழிய இந்தக் குபேர அதிர்ஷ்டம் வராதுடா! சேலத்திலேயே பத்தாவது பெரிய பணக்காரராம் என் வருங்கால மாமா! நான் ஒட்டிக் கொள்ளப் போகிற பசை சாதாரண பசையில்லேடா பலாப்பழ பிசின்!''

மனசுக்குள் உரக்கச் சொல்லிச் சந்தோஷத்தைக் கொண்டாடினேன். அன்றைக்குச் சாயங்காலமே என் பாட்டியைப் பத்தாவது முறையாகச் சாகடித்து இரண்டு நாள் லீவு வாங்கிக் கொண்டு புழுதி பறக்கப் பறக்க பஸ்ஸில் புறப்பட்டுப் போய் நெய்க்காரன் பட்டியில் இறங்கி அண்ணனையும் அண்ணியையும் வாயாரப் புகழ்ந்து ஐஸ் வைத்து சேலத்துக்கு உடனே புறப்பட்டுப் போய்ப் பெண்ணைப் பார்க்க ஆயத்தமானேன்.

பெண்ணுக்கு அப்பா — மோதிரங்கள் மின்னும் கைகளைக் கூப்பி எனக்கு ஸ்பெஷலாய்க் கும்பிடு போட, பெண்ணுக்கு அம்மா தன் மூன்று நாடி உடம்பை ஒன்பது கெஜம் தங்கச் சரிகை மேய்ந்த பட்டுப் புடவையால் இன்னும் இறுக்கமாய்ப் போர்த்திக்கொண்டு வெட்கப்பட்டாள்.

எனக்கு மனைவியாகப் போகிற பத்மா என்கிற பத்மலோசனி இரண்டரை நாடி சரீரத்தோடு கழுத்தே இல்லாமல் ஏராளமான மார்போடு வெட்கப்பட்டுக் கொண்டே வந்தாள்.

பெண்ணுக்கு அப்பா ஒரு அசட்டு இளிப்பு இளித்தார். ''ஹி...ஹி... பொண்ணுக்குக் கொஞ்சம் பூசின மாதிரி உடம்பு... கொஞ்சம் தாராளமாகச் சாப்பிடுவா... ஹி...ஹி''

பத்மலோசனி என்னை ஆசையோடு பார்வையாலேயே விழுங்க — நான் நெளிந்தேன்

வெட்கப்பட்டுக் கொண்டு! இதைச் சமாளிக்க முடியுமா?

காருக்கும் பங்களாவுக்கும்— நகைகளுக்கும் பாங்கில் தூங்கும் பணத்துக்கும்—

ஆசைப்பட்டுக் கொண்டு— சித்த யோகமும் அமிர்த யோகமும் கை கோத்துக் கொண்டு வந்த ஒரு விடியற்காலையில் குளிரில் கைகள் நடுங்கப் பத்மலோசனியின் ரேஸ் கோர்ஸ் மைதானம் மாதிரி இருந்த கழுத்துப் பரப்பில் மூன்று முடிச்சைப் போட்டேன்.

அன்றைக்குச் சாயந்திரம் ரிசப்ஷன்.

காற்றடித்த பிரும்மாண்டமான பலூன் மாதிரி என் அருகே உட்கார்ந்திருந்தாள் பத்மலோசனி. மூன்று கஜத்துக்குப் புத்தம் புதிதாய்த் தாலிக் கொடி அவள் கறுப்புக் கழுத்தில் மின்னியது. யாரோ ஒரு கோலாப்பூர் பயில்வானுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருப்பதைப் போல் ஓர் உணர்வு. போட்டிருந்த ரோஜா மாலையில் முப்பது சதவீதத்தைத் தின்றுவிட்டிருந்தாள்.

வாழ்த்த வருகிறவர்கள் எல்லாம் என்னைப் பரிதாபமாகப் பார்த்தார்கள்.

'பார்த்துட்டுப் போங்கடா பொறுமை புடிச்ச பசங்களா... ஒரே மாசம்... என்னுடை பத்மலோசனியை எப்படி மாத்திக் காட்டறேன் பாருங்கடா!'

சேலையை மாற்றுவதற்காகப் பத்மலோசனியைச் சில பெண்கள் அழைத்துப் போக—

நான் சிகெரெட் பிடிப்பதற்காக—

என் அறைக்குத் திரும்பினேன்.

நாற்காலியில் சரிந்தேன்.

என் அறைக்கு எட்டிநூற்போலிருந்த நடைபாதையில் அந்தப் பேச்சுக் குரல் கேட்டது.

''நம்ம வைத்தியலிங்கம் கெட்டிக்காரன்! விலை போகாம கன்னங் கரேலென்று காட்டெருமை மாதிரி இருந்த பெண்ணைக் கட்டிக் கொடுத்திட்டானே!''

''அந்தப் பையனுக்கு அந்தப் பெண்ணைப் புடிச்சதோ என்னவோ? எல்லாம் பணத்துக்கு ஆசைப்பட்டு 'சரி'ன்னு சொல்லியிருப்பான்....''

''அந்த விஷயத்திலேயும் அந்த மாப்பிள்ளை ஏமாறப் போறான்.''

''எப்படி?''

''இதுக்கு முன்னுடி இருந்த எல்லா மாப்பிள்ளைகளும் ஏகமாக் கறந்துட்டானுக... வைத்தியலிங்கத்தோட இந்தப் பங்களா மேலே ஏகப்பட்ட கடன்! இருந்த ரெண்டு மில்லும் லாக் அவுட். லட்சக் கணக்கில் நஷ்டம். ஆயிரம் ரெண்டாயிரம்னு தாங்குவான். லட்சக் கணக்கில் நஷ்டம்னு எவன் தாங்குவான்? இனி மீறிப் போனு ஆறே மாசம்! பங்களாவும் காரும் ஏலத்துக்கு வந்துடும்... கல்யாணக் கூட்டத்தைப் பார்த்தியா? வந்தவங்களை விரல் விட்டு எண்ணிடலாம்.... ஆள் 'பாப்பர்' ஆகப் போறான்னு தெரிஞ்சதும் எந்தப் பணக்காரனுமே பக்கத்தில கூட வரல்லே...!''

—என் உச்சந்தலையில் சாவகாசமாக இடி இறங்கிக் கொண்டிருக்க நான் ரோகிணியானேன்.

ஜமார் என்பது ஆண்டுகளுக்கு முன், இந்தியாவில் தனியார் துறையில் பல ரயில்வே கம்பெனிகள் செயல்பட்டு வந்தன. பயணிகளைக் கவருவதற்காகப் பல்வேறு ரயில்வே கம்பெனிகளும் தங்கள் ரயிலில் பிரயாணம் செய்தால் இலவசமாக லட்டு, மைசூர்பாகு போன்ற இனிப்புக்கள் வழங்கப்படும் என்றும், வேஷ்டி சட்டை போன்ற பொருட்களும் தரப்படும் என்றும் விளம்பரப் பத்திரிகை வந்தனர்! -பி. நாராயணன்





# எம்மை மதிக்கப் பழகுங்கள்!

தொழிற்சாலையில் வேலை செய்யும் பெண்களின் எண்ணிக்கை இப்பொழுது அதிகமாகிக் கொண்டே வருகிறது. அவர்களுக்குள்ள சில குறைகளை நால்வர் விவாதிக்கின்றனர்.

விஜயா ஸ்ரீதரன், கமலா மணி, சந்தான லக்ஷ்மி, முத்துலக்ஷ்மி. நால்வருமே எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்தவர்கள். பிரிட்டானியா பிஸ்கட் தொழிற்சாலையில் பணிபுரிகிறவர்கள்.

கமலா: நாங்கள் தொழிற்சாலையில் வேலை செய்வதால் மக்களிடையே எங்களுக்கு சமூக அந்தஸ்து இருப்பதில்லை. காரியாலயத்தில் பணிபுரிபவர்களை மதிப்பது போல் எங்களை மதிப்பதில்லை. எங்கள் தொழிலக காண்டீனிலே டோக்கனைக் கொடுத்து உணவுப் பொருள்களையோ, காப்பி, டீயையோ நாங்க வாங்கிப் போகணும். அதே சமயத்தில் காரியாலயத்தில் நாற்காலிகளில் அமர்ந்து வேலை செய்யும் பெண்களுக்கு மேஜையில் கொண்டு வந்து 'சர்வ்' செய்கிறார்கள்.

விஜயா ஸ்ரீதரன்: வெளி வட்டாரத்திலும் இந்த உணர்வு இருக்கிறது. பஸ்ஸில் பெண்களுக்கு என்று ஒதுக்கியிருக்கும் இடத்தில் ஆண்கள்தான் உட்கார்ந்திருக்கிறார்கள். தொழிற்சாலையில் வேலை செய்யும் பெண்கள் தானே! நிற்கட்டுமே என்ற அலட்சியம்.

முத்துலக்ஷ்மி: பஸ் டிரைவர்களுக்கும் தொழிற்சாலையில் பணிபுரியும் பெண்கள் என்றால் ஒரு இளக்காரம். எங்களைப் பார்த்தாலே கிண்டலாக ரேஷன் கார்டு வந்துடுத்து என்கிறார்கள்!

கமலா: எங்களுக்கெல்லாம் ஷிப்ட் முறைதான். காலை 7-15 முதல் மாலை 3-15 மணி வரை வேலை. பெண்களுக்கு மட்டும் வேறு ஷிப்டே கிடையாது. இதில் ஒரு பத்து நிமிஷம் தாமதமாகி விட்டாலும் சம்பளத்தைப் பிடிப்பார்கள். அரை நாள் சம்பளம் போச்சு. ஆண்களுக்கு என்றால் சொந்த வேலை இருக்கும்போது வேறு ஷிப்டுக்கு மாற்றிக் கொண்டு விடுகிறார்கள். இந்த வசதி எங்களுக்கு இல்லை. ஓவர்டைம் கிடையாது.

சந்தான லக்ஷ்மி: எங்களுக்கு வைத்தியம் பார்த்துக்கொள்ள ஈ. எஸ். ஐ.க்குத்தான் போக வேண்டும். நாங்கள் ஒரு கோடியில் இருக்கிறோம். ஈ. எஸ். ஐ. மருத்துவமனை இன்னொரு கோடியில் இருக்கிறது. ஒரு அவசரம் ஆபத்து என்றால் அதனைப் பயன்படுத்த முடிவதில்லை. மாதா மாதம் சம்பளத்தில் அதற்குப் பணம் கட்டிவிட்டுத் தனி மருத்துவரிடம் பணம் கொடுத்துப் பார்த்துக் கொள்கிறோம். உடல் நலம் சரியில்லை என்றால் ஈ. எஸ். ஐ.தான் லீவு எழுதித் தர வேண்டும் என்று ஒரு சட்டம். அதற்காக டாக்ஸி வைத்துப் போக வேண்டியிருக்கிறது.

கமலாமணி: எங்களுக்குப் பொழுது போக்கு, கேளிக்கை என்று எதுவும் இல்லை.

சந்தானலக்ஷ்மி: எங்கள் கம்பெனியில் குழந்தைகளைக் கொண்டு விட பாலர் விடுதி இருக்கிறது. ஆனால் ஐந்து வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளைக் கொண்டு விடக் கூடாது. வருடா வருடம் பள்ளி விடுமுறையின்போது ஐந்து வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளை எங்கே விடுவது என்பது பிரச்னை.

கமலா: எங்க நிர்வாகிகள் நிறைய வசதிகள் செய்து தந்திருக்கின்றனர். 15 பைசாவுக்குச் சாப்பாடு உண்டு. எங்களுக்கு வேண்டியதெல்லாம் சமூகம் எங்களை மதித்து அந்தஸ்து தரவேண்டும் என்பதுதான்.

புகைப்படம்: சிக்கி பேட்டி: குமினி

படம்: ✖ விஜயா ஸ்ரீதரன் ✖ கமலா மணி ✖ சந்தான லக்ஷ்மி ✖ முத்து லக்ஷ்மி



# பாட்டுக்கொரு புலவன்

ம.பொ.சி

## 4. உலக மகா கவி

பெல்ஜியம் ஜெர்மனியால் வீழ்த்தப்பட்டபோது, வீழ்ச்சியுற்ற அந்த நாடு பிரிட்டனோடு கூட்டுச் சேர்ந்திருந்தது. ஆம்; முதலாவது பெரும் போரிலே.

பெல்ஜியத்தை வீழ்த்திய கெய்சர் ஆண்ட ஜெர்மனி, இந்திய விடுதலை வீரர்களிடம் அனுதாபம் உடையதாக இருந்தது. வீரன் செண்பகராமன், எம். என். ராய், பாரதியாரின் நெருங்கிய நண்பரான எம். பி. திருமலாச்சாரி, பாரதியாருடன் பழகிய தூத்துக்குடி வாசியான குருநாத ஐயர் ஆகிய புரட்சி வீரர்கள் எல்லாம் பெர்லினிலேயே முகாம் செய்திருந்த காலம் அது. இந்தியாவிலிருந்த தேச பக்தர்களிலேயும் பெரும்பாலோர் ஜெர்மனியின் வெற்றியையே விரும்புவோராயிருந்தனர். இந்த நேரத்தில்தான் ஜெர்மனியால் வீழ்த்தப்பட்ட பெல்ஜியத்துக்கு வாழ்த்துக் கூறியிருக்கிறார் பாரதியார். இந்த இடத்திலே பாரதியாரின் தேசாபிமானத்தையும் வென்று நிற்கிறது, அவருக்கு இருந்த தார்மீக நெறியும் மனிதாபிமானமும்! இப்படிப்பட்ட ஒரு கவிஞனை "உலக மகாகவி" என்று சொன்னால் அது மிகையாகாதல்லவா?

பாரதியார் தம் காலத்தில் ருஷ்யாவில் தோன்றிய பொதுவுடைமை ஆட்சியை வரவேற்றும் வாழ்த்துக் கூறியிருக்கிறார். அப்போது புதுவையில் இருந்தார். அதனால்தான், பிரிட்டன் விரும்பாத — இந்திய அரசு ஏற்காத— புதிய ருஷ்யாவுக்கு வாழ்த்துக் கூற அவரால் முடிந்தது! அதில் தாம் வாழும் நாட்டு மக்களுடைய மனோபாவத்தை மறந்துவிடாமல் எதிரொலிக்கிறார்.

"மகாகாளி பராசக்தி
உருசிய நாட்டினில்
கடைக்கண் வைத்தாள், அங்கே
ஆகாவென்றெழுந்ததுபார்
யுகப்புரட்சி; கொடுங்கோலன்
அலறி வீழ்ந்தான்"

என்று பாடுகின்றார். ருஷ்யாவில் ஜார் ஆட்சி காலத்திலே புரட்சி செய்தது அங்குள்ள மக்கள் என்பது — குறிப்பாக, தொழிலாளி வர்க்கம் என்பது நாம் அறிந்தது தான். ஏன்? பாரதியாரும் அறிந்தது தான். இருந்தும், மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாளாம்! அதனால் அந்த நாட்டிலே "ஆகா" என்று எழுந்ததாம் வர்க்கப் புரட்சி! பாரதியார் பகுத்தறிவின் பகைவரல்ல; மூட நம்பிக்கையாளருடன் மோதியவரும் கூட: ஆயினும் எங்கோ ருஷ்ய நாட்டில் நடந்த புரட்சியை எழுத்து வாசனையற்ற இங்குள்ள மக்களுக்குச் சொல்கிறோம் என்பதனை நினைப்பில் வைத்துப் பாடுகிறார். 'எல்லாம் அவன் செயல்' என்ற நம்பிக்கையுடையவர்களுக்கு எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படிச் சொல்கிறார்.

"கொடுங்கோலன் ஜார் வீழ்ந்துவிட்டான்" என்று சொல்லிவிட்டால் போதுமா? அவன் எப்படிப்பட்டவன் என்பதையும் சொல்ல வேண்டும் அல்லவா? அவனுக்குச் சரித்திரத்தில் இடம் பெற்றுவிட்ட கொடுங்கோலர்களை உவமை சொன்னால், இங்குள்ள பாமரன் புரிந்து கொள்வானா? மாட்டானே! அதனால் புராணத்தில் வரும் இரணியனை உவமை காட்ட விரும்பி, "இரணியன்போல் அரசாண்டான் ஜார் எனும் பேர் இசைத்த பாவி" என்கிறார்.

இத்தாலி தேசத்து விடுதலை வீரனாகிய மாஜினி, "யௌவன இத்தாலி" என்றொரு அமைப்பை நிறுவி, அதன் உறுப்பினர் எடுத்துக்கொள்ள வேண்டிய உறுதி மொழியையும் தயாரித்து அதனை ஒவ்வொரு விடுதலை வீரனும் எடுத்துக்கொள்ளச் செய்தான். அவனே அந்த உறுதிமொழியை எடுப்பது போன்று பாரதியார் பாடியுள்ளார்.

அதையும் "பேரருட் கடவுள் திருவடியாணை" என்றுதான் தொடங்குகிறார், "புதிய ருஷ்யா" என்ற பாடலை மாகாளி பராசக்தி என்று தொடங்கியது போல! அந்தப் பாடலிலே வரிக்கு வரி அவர் பாரதத்தையே நமக்குக் காட்டுகிறார்.

"சுதந்திரத் துவஜம் துலங்கிலா நாட்டிடைப் பிறந்தேன்" என்ற வாசகம் அற்றை நாளில்பாரதத்துக்கும் பொருந்துவதுதானே!

"மற்றை நாட்டவர்முன்
நின்றிடும் போழ்து
மண்டுமென் வெட்கத்தினனை"

என்னும் வரிகளிலே அவர் பாரதத்தின் நிலையை நினைந்து நினைந்து தான் வெட்கப்படுவதனையே நினைவூட்டினாரென்று கொள்ளலாம்தானே.

"பிஜித் தீவிலே இந்து ஸ்திரீகள்" என்ற பாடல் பாரதி தன் கண்ணீரால் வரைந்ததாகும். "பிஜித் தீவில் இந்து ஸ்திரீகள்" என்று அவர் குறிப்பிடுவது, அந்தத் தீவுக்கு ஒப்பந்தக் கூலிகளாகச் சென்றிருந்த தமிழ்ப் பெண்களை.

பிஜித் தீவுக்குக் காற்றைத் தூது விடுகிறான். அக் காற்றுதான் பிஜித் தீவின் —கரும்புத் தோட்டங்களில் வெள்ளை முதலாளிகளிடம் தமிழ்ப்பெண்கள் படும் அல்லல்களைப் பற்றி முன்பு பாரதியாருக்குச் சேதி சொன்னதாம். அதனால் "பிஜித் தீவிலே எங்கள் பெண்கள் அழுத குரல் கேட்டிருப்பாய் காற்றே!" என்று கூறி "அதை மீட்டும் உரையாயோ!" என்று கேட்கிறார்.

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டம் - பாரதீய வித்யாபவன் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# All under one roof

# S.R.V.S.

### RAILWAY BOOKING & CLEARING
We are the accredited ancillary services contractors to the Southern Railway for over three decades. We arrange to clear parcels/goods from rail heads and deliver them and we also arrange to book parcels/goods by rail.

### SHIPPING & CLEARING
To assist Exporters and Importers we have a special section of qualified staff who arrange to clear imports and ship exports.

### WAREHOUSING
We have a warehouse area of some 27,000 Sq.ft. Our warehouses are approved by Nationalised Banks for storage of goods hypothecated to them. We also offer to store machinery etc. which are not in immediate need-to release space for maximum production in your factory.

### LORRY BOOKING & CLEARING
We arrange for collection and despatch of goods from the various lorry terminals in the city.

### SHIFTING OF MACHINERY/ EQUIPMENT
We have with us trained and experienced personnel and different types of vehicles and equipment to suit your needs. We also undertake to move office/household equipment/effects.

## SRI RAMA VILAS SERVICE LTD.

73/76, Anna Salai, Madras-600 002
Grams : "ROADHAUL" Phone : 83836, 83837, 83838, 83762

**OUR SERVICE STARTS RIGHT FROM OUR NAME**



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நகரெங்கும் அணி செய்வோம். அதன் துவக்கமாக உங்கள் வீடுகள் அணி பெறட்டும்.

GARWARE
गरवारे

**இயோமைட் பாம்மெல் ஸின்த்தெடிக் இனாமல்.**
உயர்தர க்ளாஸ் (gloss) இனாமல். எல்லா வகை வெளிப்புற, உட்புற பூச்சுகளுக்கும் உகந்தது. 36 வண்ணச் சாயல்கள்.

**கிங்லாக் ஹை க்ளாஸ் ஸின்த்தெடிக் இனாமல்.**
ஷீட் மெட்டல் காஸ்டிங்குகள், மரம், மெஷின்கள் ஆகியவற்றுக்குச் சிறந்த பூச்சு. நீடித்திருப்பது. அலங்காரமானது. 36 வண்ணச் சாயல்கள்.

**இயோமைட் அக்ரிலிக் இமல்ஷன்.**
உயர்தர பெயிண்ட். பட்டுப் போல மென்மையான ஃபினிஷ். நீடித்திருப்பது. கழுவக் கூடியது. 34 வண்ணச் சாயல்களில் கிடைப்பது.

**ஸுபர் ப்ளன்லெம் வாட்டர் ப்ரூஃப் சிமெண்ட் கோட்டிங்.**
உட்புற, வெளிப்புறப் பரப்புகளுக்கு. சிறப்பாக, மணல், கல்நார், காங்கிரீட், செங்கல் ஆகியன வேய்ந்த பரப்புகளுக்கு மிக ஏற்றது. 20 வண்ணச் சாயல்கள்.

**இயோமைட் ஸுபர் ஃபைன் அலுமினியம்.**
எல்லா வகை ஸ்டீல் அமைப்புகளின் வெளிப் பரப்பைப் பாதுகாக்க. வெப்பத்தினின்றும், தீவிர சூழ்நிலைகளினின்றும் பாதுகாக்கிறது.

**கர்லாக் ஆட்டோ ஃபினிஷ்.**
வாகனங்களுக்கு உகந்தது. பளபளப்பான ஃபினிஷ் கொண்டது. 40 வண்ணச் சாயல்களில் கிடைக்கிறது.




**கர்வாரே பெயின்ட்ஸ்**